ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 11

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த
மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாஸந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| முதல் தொகுதி | 10—7—1949<br>விரோதி-ளு ஆனி-மீ | 11-வது பகுதி |
|---|---|---|

## எம்பெருமானார் ஸ்ரீஸூக்திப் பெருமை
## — அத்விதீய ச்ருதி நிர்வாஹம் —

சாந்தோக்ய உபநிஷத்தில் (6—2—1.) * ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் **ஏகமேவாத்விதீயம்** * என்று ஓதப்பட்டுள்ளது. ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யமானதென்றும் மற்றெல்லாப்பொருளும் பொய்யானதென்றும் கூறுகின்ற அத்வைத வாதிகள் இந்த வேதவாக்கியத்தை முக்ய ப்ரமாணமாகக் காட்டுவர்கள். இதில் '**அத்விதீயம்**' என்ற வொருபதம் முக்கியமானதாகக் கொள்ளப்படும். ப்ரஹ்மம் ஒன்றே யுளது, மற்றொன்றும் இல்லையென்பதாக இப்பதத்தால் விளங்குகின்றதென்பர் அத்வைதிகள். 'ப்ரஹ்மமும் ஸத்யம், மற்றெல்லாப்பொருளும் ஸத்யமே' எனக்கொள்ளும் எம்பெருமானார் தரிசனத்த வர்கள் இதற்கு என்ன சொல்லுகிறார்கள்?-என்பதை இங்கு நாம் சுருங்கச்சொல்வோம்.

**அத்விதீயம்** என்கிற பதத்திற்கு ஸம்ஸ்க்ருத வியாகரண சாஸ்த்ரத்தையொட்டி இரண்டுவிதமாக வ்யுத்பத்தி கூறலாம். 'ந த்விதீயம்—அத்விதீயம்' என்று வ்யுத்பத்தி செய்தால் தத்புருஷ ஸமாஸமாகும். 'ந வித்யதே த்விதீயம் யஸ்ய (அல்லது) யஸ்மிந்' என்று விக்ரஹம் செய்தால் பஹுவ்ரீஹி ஸமாஸமாகும். இவ்விரண்டு வழிகளில் அத்விதீய மென்கிற சொல் தேறக்கூடியது. இவ்விரண்டு வழிகளையும் நன்கு உற்றுநோக்குமிடத்து இந்த அத்விதீய பதத்தினால் 'ப்ரஹ்மம் ஒன்றேயுள்ளது, மற்றொன்றுமில்லை' என்றபொருள் கிடைக்கமாட்டாது. இதை நன்கு நிரூபித்துக்காட்டுவோம். உபநிஷத்தில் இந்த அத்விதீய பதமானது ப்ரஹ்மத்திற்கு விசேஷணமாயிருக்கின்றது. ஆகவே பொருள் பொருந்தச் சொல்லவேணும். அத்விதீயபதத்தின் முதலில் (அ) என்றுள்ளதன்றோ; இது வடமொழி யில் **நஞ்** எனப்படும்.

நஞ் தான் வடமொழி விதிப்படி (அ) என்று மாறியிருக்கிறது. ந பண்டித:— அபண்டித:, ந ப்ராஹ்மண:— அப்ராஹ்மண: என்றிவை முதலான பலவிடங்களை நெஞ் சிற்கொள்ளலாம். நஞ்ஞுக்கு ஆறு பொருள்களை சாஸ்த்ரஜ்ஞர்கள் கூறியுள்ளார்கள்; "தத்ஸாத்ருச்யம் அபாவச் ச ததந்யத்வம் ததல்பதா, அப்ராசஸ்த்யம் விரோதச் ச நஞர்த்தாஷ் ஷட் ப்ரகீர்த்திதா:" என்பது வியாகரண சாஸ்த்ரிகளின் காரிகை. உவமை, இல்லாமை, வேற்றுமை, சிறுமை, சிறப்பின்மை, பகைமை என்னுமிவ்வாறு பொருள்கள் நஞ்ஞுக்கு உரியனவாகச் சொல்லப்பட்டுள்ளன. இவற்றுள் மூன்று பொருள்களை இங் குக்கொள்ளமுடியும். அவையாவன—வேறானது, ஒப்பானது, மாறானது என்பனவாம். **அத்விதீயம்**—இரண்டாவது பொருளில் வேறானது, இரண்டாவது பொருளுக்கு

ஒப்பானது, இரண்டாவது பொருளுக்கு மாறானது என்பதாக அர்த்தங்கொள்ளலாம். இம்மூன்றுவிதமான அர்த்தத்திலும் ப்ரஹ்மந்தவிர வேறொன்றுமில்லை யென்பது தேறவே மாட்டாது.

'இரண்டாவது பொருளில் வேறானது' என்கிற முதலர்த்தத்தை யெடுத்துக்கொள்வோம். இவ்வர்த்தத்தில் ப்ரஹ்மம் இரண்டாவது பொருளைக்காட்டிலும் வேறானது என்றதாகும். அப்பொழுது இரண்டாவதுபொருள் ஒன்று உண்டென்றும், ப்ரஹ்மம் அதனில் வேறுபட்டதென்றும் சொன்னதாக ஏற்படுமேயல்லது ப்ரஹ்மந்தவிர வேறொன்றுமே கிடையாதென்று சொன்னதாக ஏற்படமாட்டாது.

இனி 'இரண்டாவது பொருளுக்கு ஒப்பானது' என்கிற இரண்டாமர்த்தத்தை யெடுத்துக்கொள்வோம். ப்ரஹமம் இரண்டாவது பொருளோடொக்குமென்றால் அப்போதும் இரண்டாவது பொருள் இல்லையென்றதாக ஏற்படமாட்டாது. உபமான வஸ்துவும் உபமேய வஸ்துவும் தனித்தனி யிருந்தாலொழிய உவமை கூறமுடியாதன்றோ. முகம் சந்திரனைப்போன்றது என்றால் உபமானமான சந்திரனும் உபமேயமான முகமும் வெவ்வேறு வஸ்துவென்று ஏற்பட்டேதீருமன்றோ.

இனி, 'இரண்டாவது பொருளுக்கு மாறானது' என்கிற மூன்றாமர்த்தத்தை யெடுத்துக்கொள்வோம் ப்ரஹ்மம் இரண்டாவது பொருளுக்கு மாறானது [விருத்தமானது] என்று சொல்லப்படும்போதும் இரண்டாவது பொருள் ஒன்று இருந்தேயாகவேண்டும். அடியோடு இல்லாததொரு பொருளையிட்டு 'அதற்கு இது விருத்தமானது' என்று சொல்ல முடியாதன்றோ. ஆகவே இவ்வர்த்தத்திலும் இரண்டாவது பொருள் இல்லையென்றதாக ஏற்படமாட்டாது. ஆக இம்மூன்றுவிதமான அர்த்தங்களிலும் இரண்டாவது பொருளின் உண்மை ஏற்படுமேயொழிய இல்லாமை ஏற்பட வழியேயில்லை.

இம்மூன்று பொருள்களையும்விட்டு அபாவம் [இல்லாமை] என்கிற பொருளைக் கொள்வோமென்று பார்ப்போம். நஞ்ஞுக்கு அபாவமென்றும் பொருள் ப்ரஸித்தமாக இருப்பதால் அதையன்றோ முக்கியமாகக்கொள்ளவேணும். கொள்வோம். அப்போது அத்விதீயமென்பதற்கு இரண்டாவது பொருளில்லாமை யென்று அர்த்தமாகும். அப்போது அத்விதீயமென்பது விசேஷண பதமாகமாட்டாது. விசேஷ்ய பதம் வேறாகி இது விசேஷணமாத்ரமாயிருக்கையாலே இங்கு அபாவத்தை அர்த்தமாகக் கூறுவதற்குப் பொருத்தமில்லாமலிருக்கிறது.

இதற்குமேல் என்ன சொல்லக்கூடுமென்னில்; தத்புருஷஸமாஸத்தை விட்டு பஹுவ்ரீஹி ஸமாஸத்தைக் கொள்வோமே; அதாவது "நாஸ்தி த்விதீயம் யஸ்ய தத்—அத்விதீயம்" என்பது பஹுவ்ரீஹி ஸமாஸம். இதில், ப்ரஹ்மமானது இரண்டாவது பொருளை யுடைத்தாகாதது என்கிற பொருள் எளிதாகக் கிடைக்கிறது. ப்ரஹ்மந்தவிர வேறு பொருள் கிடையாதென்பது இப்போது ஏற்பட்டுவிட்டதன்றோ என்று வாதம் விளையக்கூடும். இங்கே புத்திமான்கள் சிறிது ஆலோசிக்கவேண்டும். தேவதத்தனென்கிற வொருவனுக்கு ஒரே புத்திரனிருந்தான்; அவன் அந்தப் புத்திரனைச் சுட்டிக்காட்டி "**அயம் மம அத்விதீய: புத்ர:**" என்கிறான். இதனால் அந்த புத்திரனோடு ஸம்பந்தமுள்ள த்விதீயன் [இரண்டாமவன்] இல்லையென்றதாகத் தேறுமேயொழிய இரண்டாவதான வஸ்து உலகத்திலேயே இல்லையென்றதாகத் தேறமாட்டாதன்றோ. அந்த தேவதத்தனுடைய தம்பிக்கும் தமையனுக்கும் தந்தைக்கும் அவருடைய ஸஹோதரர்களுக்கும் பல புதல்வர்கள் அதே வீட்டில் உலாவிக்கொண்டிருக்கலாம். அவர்களுடைய இல்லாமையை அந்த அத்விதீயபதம் தெரிவிக்கக்கூடியதோ ஒருகாலும் தெரிவிக்கமாட்டாது. **ப்ரஹ்ம அத்விதீயம்**—ப்ரஹ்மமானது இரண்டாவது பொருளை யுடையதன்று என்றால், அந்த ப்ரஹ்மத்தோடு ஸம்பந்தமுள்ள இரண்டாவது வஸ்து வில்லையென்றதாகுமேயொழிய வேறு வஸ்துவேயில்லையென்று ஏற்படமாட்டாது.

உலகில் ஒரு வஸ்துவை இல்லையென்று நிஷேதிக்கும்போது அந்த வஸ்து எங்கேயாவது ஓரிடத்தில் இருந்தேயாகவேண்டும். எங்குமே யில்லாத பொருளை நோக்கி இல்லையென்கிற வியவஹாரம் உண்டாகமாட்டாது. துணியில்லை, பணமில்லை, பானையில்லை, யானையில்லை என்று உலகில் வழங்குவது கிடையாது. இங்கு இல்லை, இப்போது இல்லை என்று சொல்லமுடியுமேயொழிய எங்கும் எப்போதுமே யில்லையென்று சொல்லப்

போகாது. இங்கே பானையில்லை, இப்போது துணியில்லை என்றிப்படித்தான் வழங்குவர்கள். எங்குமே எப்போதுமே துணியில்லை, பானையில்லை என்று யாரும் வழங்கார்கள், இங்கில்லையென்றபோதே வேறிடத்திலுண்டென்று ஏற்பட்டுவிடும்; இப்போதில்லையென்றபோதே மற்றொருபோதில் உண்டென்று ஏற்பட்டுவிடும். எதை இல்லையென்கிறோமோ அது எங்கேயாவது ஓரிடத்தில் ப்ரஸித்தமாயிருந்து தீரவேண்டும். அடியோடு இல்லாமலிருக்கமுடியாது.

இதற்குமேல் ஒருவாதம் தோன்றும். 'மலடிமகன் இல்லை முயற்கொம்பு இல்லை, ஆகாசத் தாமரை இல்லை' என்று வழங்கிவருகிறோம். மலடி மகன் முதலிய இப்பொருள்கள் எப்போதுமே எங்குமே யில்லையென்று சொல்லப்பட்டதாக அர்த்தமேயொழிய, இப்போது இல்லை, இவ்விடத்திலில்லை என்று சொல்லுவதாக அர்த்தமில்லையே. ஆகவே கீழேகாட்டிய நியமம் அனைங்கதம்—என்கிற வாதம் தோன்றக்கூடும். இங்குச் சிறிது ஆராய்ந்துபாருங்கள். மலடிமகன் இல்லையென்றால், உலகில் மலடியேயில்லை மகனேயில்லை என்றதாகுமோ? முயற்கொம்பு இல்லையென்றால் உலகில் முயலேயில்லை கொம்பேயில்லை என்றதாகுமோ? மலடிக்கும் மகனுக்கும் ஸம்பந்தமில்லை, முயலுக்கும் கொம்புக்கும் ஸம்பந்தமில்லை என்று இவ்வளவே சொன்னதாகத் தேறும். ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்துவினுடைய ஸம்பந்தம் எப்போதுமே உண்டாகாமலிருக்கலாம். அடியோடு இல்லாததொரு வஸ்துவைப்பற்றின ப்ரஸ்தாவம் உலகில் விளையாது. சொல் ஏற்பட்டபோதே அதன் பொருளான வஸ்து உண்மையில் இருந்தேதீரவேண்டும். ப்ரஹ்மம் இரண்டாவது பொருளையுடைத்தாகாதது என்றால் இரண்டாவது பொருள் இருந்தேதீரவேண்டுமென்பது கல்வெட்டாகத் தேறிநின்றது. ப்ரஹ்மத்தில் இரண்டாவது பொருள் இல்லையென்று சொன்னால் அது எங்குமேயில்லையென்று ஏற்படவழியில்லை; காசியில் இல்லையென்றால் காஞ்சியிலோ கராச்சியிலோ உள்ளதென்று தேறுவதுபோல, ப்ரஹ்மத்தினிடத்தில் இல்லையென்றால் மற்றோரிடத்திலுள்ளதென்று ஸித்தித்துவிடுவதில் அருமையில்லை.

'ப்ரஹ்மம் அத்விதீயம்' என்று ஓதின உபநிஷத்தின் உண்மைப்பொருள் யாதெனில்; சொல்லுகின்றோம் கேண்மின்.

சோழமஹாராஜன் உலகில் அத்விதீயனாயிருக்கின்றானென்றால், அவனுக்கு நிகரான வேறொரு மன்னவனில்லை என்று பொருள்படுகின்றதேயன்றி, அவனுக்கு ஊரில்லை, வீடில்லை, மக்களில்லை, மனைவியில்லை என்று பொருள்படுகின்றதில்லையன்றோ. அதுபோலவே, ப்ரஹ்மம் அத்விதீயமென்றால் ப்ரஹ்மத்திற்கு நிகரானது மற்றொன்றில்லை என்றே பொருள்படும். சோழராஜன் அத்விதீயன் என்பதற்கு அவன் வேறொரு வஸ்துவையுமுடையனாகாதவன் என்றே பொருளாகுமானால் 'அவன் தரித்ரன்' என்று சொன்னதாகவே முடிந்துநிற்கும். இந்தச்சொல் அவனுக்கு பூஷணமன்றிக்கே தூஷணமாகவும் தலைக்கட்டும், அநுபவத்திலோ அப்படியில்லை. 'ஏகச் சோளந்ருபஸ் ஸம்ராட் அத்விதீயோஸ்தி பூதலே' என்றால் இது அவனுக்கு மிக்க பெரும்புகழுரையாகவே விளங்குகின்றது. அதுபோலவே இங்கும் ப்ரஹ்மம் அத்விதீயமென்கிற சொல் புகழுரையாகவே விளங்குகின்றது. ப்ரஹ்மத்துக்குக் குணமில்லை, விக்ரஹமில்லை, விபூதியில்லை, நித்யதாஸர்களான ஜீவர்களில்லை, உலகமில்லை என்று அர்த்தமாகமாட்டாது. அப்படி அர்த்தமானால் இது ப்ரஹ்மத்திற்குப் பழிப்புரையேயாம். வேதம் முதலிய ப்ரமாணங்களினால் ஸித்தமான ஸகல ஜகத்துக்களும் ஜீவாத்மாக்களும் அனந்த குணங்களும் இந்த அத்விதீயமென்ற சொல்லால் இல்லை செய்யப்படமாட்டா. ப்ரஹ்மத்துக்கு அனந்த குணங்களும் உபய விபூதியும் அநந்த ஜீவராசிகளும் உண்டென்பது சாஸ்த்ரஸித்தம். *** ந தத்ஸமச் சாப்யதிகச் ச த்ருச்யதே *** என்கிற உபநிஷத் வாக்யமானது ப்ரஹ்மத்திற்கு ஒத்தாரும் மிக்காருமில்லையென்று சொல்வதனால் அதற்குப் பொருந்தியதாகவே பொருள் விவரிக்கப்பட்டது. * பாதோஸ்ய விச்வா பூதாநி. த்ரிபாதஸ்யாம்ருதம் திவி * என்கிற ச்ருதியானது ஸர்வ பூதங்களையும் ஈச்வரனுடைய விபூதியில் ஏகதேசமாகச் சொல்லுகிறது. இப்படி பல ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளால் ஸித்தமாகும் குணங்கள் விபூதிகள் முதலியவற்றை மறுக்காமலும் லோகவ்யவஹாரத்தையொட்டியும் அத்விதீய ச்ருதிக்கு அர்த்தம் செய்வதில் எம்பெருமானாருடைய திவ்ய ஸூக்திகளே வல்லமைபெற்றவை.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

# அழகிய மணவாள ஜீயரின் அற்புத ஸ்ரீமுகம்

இந்த ஜீயர் சில காரணங்களால் சில ஆண்டுகளாகக் காஞ்சீபுரத்து மடத்தைத் தாம் விஸர்ஜனம் செய்தோ தகுந்த அதிகாரிகளால் விஸர்ஜனம் செய்விக்கப்பட்டோ சிலகாலம் ஸ்ரீபெரும்பூதூரில் காபேயமாக வாழ்ந்துவந்தார். அங்குள்ளாரான பல பெரியார்களும் வெறுக்க, பிறகு ஜடப்ரோல் என்னும் கிராமத்தில் வந்து சேர்ந்து சில பெண்பிள்ளைகளுக்குக் கும்மிப்பாட்டுகளும், சோபனப் பாடல்களும் கற்பித்துக்கொண்டு வாழ்ந்துவருகிறார். இவர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகைக்கு ஒரு ஸ்ரீமுகம் அனுப்பினாராம். அது அச்சாகி வெளிவந்திருக்கிறது.

மேற்படி பத்ரிகையின் எடிடரான புத்தூர் வக்கீல் சுவாமிகள் தாம் எழுதிய ஷோடசாத்யாயியென்கிற புத்தகத்தை மேற்படி ஜீயருக்கு அனுப்பி அபிப்ராயம் தெரிவிக்கும்படி கோரியிருந்தாராம். அதற்கு ஜீயர் சுருக்கமாக பதில் எழுதிவிட்டார்; அதாவது நான் தேசாந்தரியாய் இங்கே வந்திருக்கிறேன்; என்னிடம் ஒரு புத்தகமுமில்லை; நாலு மாதம் கழித்துத் திருநாராயணபுரம் போய்ச்சேர்ந்து பார்ப்போம் என்று எழுதிவிட்டார். அவ்வளவோடு நிற்காமல் வேறு சில அஸப்ய வார்த்தைகளையும் எழுதியுள்ளார்—

> “அமர்யாத; க்ஷுத்ர: இத்யாதி தசாவதார புருஷனும், தன் நெஞ்சில் தோற்றினதே சொல்லி லோகக்ஷோபம் செய்துவரும் ம்ருதப்ராயனுனை அதிகாரிக்கு ஷோடச கர்மம்போல் ஷோடசாத்யாயி நடந்தாலும் ஓராண்வழியாய் உபதேசித்துவந்த ஸத்ஸம்ப்ரதாய சித்தரான முன்னோர்களின் கோஷ்டியில் சேர ஸபிண்டீகரண யோக்யதை இடையாது”

என்கிற வாக்கியங்களை யெழுதியுள்ளார் இதற்கு என்ன அர்த்தம் என்பதை அந்த ஜீயரேதாம் வியாக்கியானிக்கவேண்டும். அவர் ஸ்ரீபெரும்பூதூர் பாடசாலையில் காவ்ய பாடங்கள் சொல்லிக்கொண்டிருந்தவர். அப்போது ஸ்ரீஆஸூரிஸ்வாமி வேதவாத்யார்ஸ்வாமி போன்ற மஹான்கள் இவரை அக்கிலிபிக்கிலி வாத்யாரென்று பெயரிட்டு வழங்கிவந்தார்கள். முன்பின் அந்வயமில்லாமல் பேசுவது இவருடைய வழக்கம். பிறகு காவிய பாடங்களை விட்டு, யாளிவாஹன மஹோத்ஸவஸ்வாமியென்று பேர்பெற்ற நாடகாநுபவத்தில் மஹாரஸிகராய் வாழ்ந்தகாலத்திலும் நாளதுவரையிலும் அக்கிலிபிக்கிலி யுபாத்யாயரென்கிற பிருது மாருமலே யிருந்துவருவதனால் அதற்குத் தகுதியாகவே மேற்குறித்த வாக்கியங்களை யெழுதியிருக்கிறார் போலும்

ஒரு வக்கீலானவர் தம்முடைய புத்தகத்தை யனுப்பி அபிப்ராயம் கேட்டால் அவரை இப்படியா தூஷிப்பது? அவரை மர்யாதை கடந்தவரென்றும், ஷோடசாத்யாயியைத் தான்தோன்றியாய் எழுதி லோகக்ஷோபம் செய்பவரென்றும், திருப்பதிஜீயர்ஸ்வாமி போன்ற பல மஹநீயர்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகளினால் ம்ருதப்ராயரென்றும்......இப்படி உலகம் அர்த்தம் செய்துகொண்டு வருந்தும்படியாகவா எழுதுவது. யதியாயிருக்குமொருவர்க்கு இது தகுதியா? தற்காலம் என்கையில் ஒரு புத்தகமுமில்லை: பிறகு பார்ப்போம் என்றெழுதினரே, அது யுக்தம். அவ்வளவோடு நின்றிருக்கலாமே. நீர் அனுப்பிய ஷோடசாத்யாயியில் இன்ன இன்ன பிழைகள் இருக்கின்றன என்று யாவரும் உணரும்படி ஒன்றிரண்டு விஷயங்களையாவது எடுத்துக்காட்டி தூஷித்தாலும் அது ஒரு விதமாயிருக்கும். புத்தகத்தினுள் கண்ணையும் செலுத்தாமல் வாயையும் வைக்காமல், ஷோடசம் ஸபிண்டீகரணம் என்று வாயில்வந்த சப்தங்களையெல்லாம் ஒன்றோடொன்று அந்வயியாதபடிக்கும் பண்டிதர்கள் அருவருக்கும்படிக்கும் எழுதிவிடுவது என்ன அழகு?

ஸ்ரீபாஷ்ய புஸ்தகத்தை மூடிவைத்து தண்டம் ஸமர்ப்பிப்பதுதான் இவர்க்கு ஸ்ரீபாஷ்யம் ஸேவிப்பதாமென்று காஞ்சியும் ஸ்ரீபெரும்பூதூரும் நன்கறியும், இரண்டு மூன்று காவ்யங்களோடு நிற்பவராயும் அதிலும் அக்கிலிபிக்கிலி ஞானியாயுமிருக்கிற இவர்க்கும் ஸ்ரீபாஷ்யத்துக்கும் அந்தோ என்ன ஸம்பந்தம்! ஷோடசஸபிண்டீகரண ஸ்ரீஸூக்தி வைபவங்கள் அந்த மஹாக்ரந்தத்திலும் ஏறவேண்டுமோ? கும்மிப்பாட்டே கோலாஹலமாயும் சோபனமே சரணமாயுமிருக்கிற அழகை, காணவாரீர் மாதர்காள் காணவாரீர், கையும் மோகராவுமாய்க் காணவாரீர். காணவாரீர் யாவரும் காணவாரீர் கர்னூல் ஜில்லா வாசலில் காணவாரீர்.

இப்படிக்கு,

ஜடப்ரோல் ஸம்ஸ்தான மஹாசார்யர் கோயில்,

2—7—49

**கந்தாடை அண்ணன் ஸ்ரீநிவாஸாசாரியர்**

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# மாமுனிவனருள் வெற்றி.

(ப்ர. அண்ணங்கராசார்யர்.)

1. பணவா ளரவணைப் பள்ளியினார் போற்றும்
மணவாள மாமுனியை வாழ்த்துங்—குணவாளர்
கொண்டாட நின்றவென் கொள்கைதனைக் கூர்மதியீர் !
விண்டாரு மேற்பர் விரைந்து.

2. கீதையுப தேசங் கிளர்ந்த விடந்தன்னில்
போதமிகு பூருவர்தம் பொன்மொழியைக்—காதலுடன்
சீராகச் சிந்திக்கச் சிந்தைதனில் தோன்றியதை
நேராகச் சொல்வேன் நிறைந்து.

அடியேனுடைய பத்ரிகாச்ரம த்விதீய யாத்திரையில் (2—7—49ல்) குருக்ஷேத்ரத்தில் கீதாவதார புண்ணிய ஸ்தலத்தில் இருந்து எழுதப்பட்ட வியாஸமிது.

3. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி சின்னஜீயர் ஸ்வாமி திருக்கண் சாத்தியருளித் திருவுள்ளமுகந்து ஸ்ரீவைஷ்ணவ மஹாஸந்தி யென்று பெயரிடப்பெற்று உலகமெங்கும் பரவியுள்ள முப்பத்திரண்டுமொழிமாலையும் ஸாதுஸாத்விக ஸம்வாதமும் தேனும் பாலு மமுதுமாகத் தித்திக்கின்றபடியைப் பலபல மஹநீயர்கள் தம்தம் திருமுகங்களினால் தெரிவித்தருள்கின்றார்களென்பதை உலகமுழுது முணரும். பாமரஜநப்ராமகமாகப் பிறர் செய்யும் கோலாஹலம் எத்தகைத்தாயிருந்தாலும் விஷயவுண்மை யொன்றிலேயே நோக்குடையார்க்கு மேன்மேலும் அவ்விஷயவுண்மைகளை யெடுத்துரைத்துப் பரமானந்தம் பயக்கவே நாம் முயல்வோம்.

4. நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தப்ரவசனங்கள் பல திவ்யதேசங்களிலும் நடந்து வந்தாலும், அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் அவிச்சிந்ந பரம்பரையாகவும் ஸர்வாதிசாயியாகவும் நடந்துவருவது ஸ்ரீவானமாமலையிலாதலாலும், உண்மையில் உபய வேதாந்தங்களையும் அடைவே கற்றுணர்ந்த அறிஞர்கள் பலர் அத்திவ்ய தேசத்தில் திகழ்வதனாலும், அவ்விடத்துள்ள ஸ்வாமிகள் தத்வத்ரய வியாக்கியானத்தில் (103-ஆம் சூர்ணையில்) "பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே யருளிச்செய்தது" என்று முடித்திருக்கிற விடத்தை எங்ஙனே நிர்வஹிக்கின்றார்கள்? என்பதை விசேஷித்துத் தெரிந்துகொள்வதற்காக அடியேன் அவ்விடத்திற்கு விண்ணப்பம் விடுத்திருந்தேன். அடியேனது ஆராய்ச்சியில் இதுகாறும் எட்டாததொரு விஷயம் அவ்விடமிருந்து கிடைத்த ஸ்ரீமுகத்தினால் விளங்கிற்று. அது முதன்முதலாக ஈண்டு விஜ்ஞாபிக்கப்படுகின்றது.

5. தத்வத்ரயத்திலேயே ஈச்வர ப்ரகரணத்தில் ஒன்பதாவது சூர்ணையின் வியாக்கியானத்திலே—

"எம்பெருமானுடைய திவ்யாத்மகுணங்களாவன—ஜ்ஞாநசக்த்யாதி ஷட்குணங்களும் அதிலேபிறந்த ஸௌசீல்யாதிகளும்—என்கிற இவ்வாக்யத்துக்கு அர்த்தமெழுதுகிறவளவில் 'அதிலே பிறக்கையாவது வஸ்தூத்கர்ஷாபாதக ஷாட்குண்யாயத்த குணபாவமாகை' என்றிறே விவரணத்தில் ஆச்சான்பிள்ளையருளிச்செய்தது"

என்றுள்ள மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைச் சிறிதே ஆராய்ந்தாலும்போதும். இங்கு "எம்பெருமானுடைய..............."ஸௌசீல்யாதிகளும்" என்கிறவரையிலுள்ள ஸ்ரீஸூக்தியானது மூலக்ரந்தத்தின் வாக்யமாகவும், மேலே "அதிலே பிறக்கையாவது"

என்று தொடங்கியுள்ள ஸ்ரீஸூக்தியானது தத்விவரண வாக்யமாகவும் நன்கு காட்டப்பட்டிருக்கின்றது. அந்த மூலக்ரந்தம் யாருடையது என்று விமர்சிக்கவேணும். அது பிள்ளை லோகாசார்யருடையதன்று; பின்னை யாருடைய தென்னில்; பெரியவாச்சான்பிள்ளை யுடையதேயென்று நிச்சயிக்கத் தட்டில்லை. எங்ஙனேயென்னில்; கீழே 103-ஆம் சூர்ணையின் வியாக்கியான முடிவில் 'பெரியவாச்சான்பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது" என்றுள்ள ஸ்ரீஸூக்தியினால் தத்வ விஷயமாகப் பெரியவாச்சான்பிள்ளை அதிஸம்க்ஷேபமாய் ஒரு க்ரந்தமிட்டருளியிருப்பதாக ஸ்பஷ்டமாயிற்றன்றோ? அந்த க்ரந்தத்திலுள்ள ஸ்ரீஸூக்தியேயிது என்று நன்கு விளங்கக் குறையில்லையன்றோ.

6. மேலேயெடுத்துக்காட்டிய * எம்பெருமானுடைய வித்யாதியான மூலஸ்ரீஸூக்தியானது வேறு யாரேனு மோராசார்யருடையதா யிருக்குமே யொழியப் பெரியவாச்சான் பிள்ளையதாக இராது என்று பிறர் சொல்லவேண்டுமினி. 'வேறு யாருடையதாயிருக்கலாம்? ஆலோசித்துச் சொல்லுங்கள்' என்று கேட்டால் வாய்திறப்பின்றி வாளாவிருக்கவேண்டும். பிறருடைய கொள்கையின்படி ஆச்சான்பிள்ளையே பெரியவாச்சான்பிள்ளையாகில், அப்பெரியவாச்சான்பிள்ளை தமக்கு முற்பட்டவரான எந்த ஆசார்யருடைய ஸ்ரீஸூக்தியை மூல க்ரந்தமாகக்கொண்டு விவரணம் செய்தருளுகிறார்? என்று விமர்சிக்குமளவில் ருஜுவான முடிவு தேறாது. இந்த ஸங்கடத்தைப் பரிஹரித்துக் கொள்வதற்காகப் பிறர்சொல்லித் தீரவேண்டிய வார்த்தை யாதெனில்; 'தம்முடைய வாக்கைத் தாமே விவரித்துக்கொள்ளவுங் கூடுமாகையாலே ஸ்வோக்திக்கு ஸ்வயமேவ விவரணம் செய்திருக்கிறார்; மூலகாரரும் பெரியவாச்சான்பிள்ளையே, தத்விவரணகாரரும் பெரியவாச்சான்பிள்ளையே' என்பதாக.

7 இஃது அடியோடு பொருந்தாது; ஏனென்னில்; மணவாளமாமுனிகள் இங்கு ஸ்ரீஸூக்திவிந்யாஸம் செய்தருளியிருக்கும் வைகரியை உற்று நோக்கவேணும்; மூலகாரரும் விவரணகாரரும் ஒருவராகவே கொண்டு ஒருவருடைய ஸ்ரீஸூக்தியையே மாமுனிகள் உதாஹரிப்பவரானால், "என்கிற இவ்வாக்யத்துக்கு அர்த்தமெழுதுகிறவளவில்" என்றொரு வாக்கியம் ஊடேயிட்டிருப்பது மிகவும் அநாவச்யகமாகும். இடையில் அந்தவாக்ய மில்லாமல் * எம்பெருமானுடைய வென்று தொடங்கி......குணபாவமாகை யென்னுமளவும் அவ்யவதாநேந ஏகவாக்யமாகவேயன்றோ உதாஹரிக்கப்பட்டிருக்கவேண்டும். ஒருவருடைய பங்க்தியையே உதாஹரிப்பதானால் அதுவன்றோ ஸமஞ்ஜஸமான ப்ரக்ரியை. அதைவிட்டு "என்கிறவிவ்வாக்யத்துக்கு அர்த்தமெழுதுகிறவளவில்" என்று இடையே ஸாதித்திருப்பதால் மூலவக்தா ஆச்சான் பிள்ளையல்லர் என்பது நன்கு ஃபலிக்கப்பட்டதாகும். தத்வபரமாக வொரு க்ரந்தம் பெரியவாச்சான்பிள்ளை யிட்டருளியிருப்பதாக மாமுனிகள்தாமே ஸுஸ்பஷ்டமாக 103 ஆம் சூர்ணையில் காட்டிவிட்டபடியால் இங்கு மூலவக்தாவாக வேறோராசிரியரைக் கல்பிக்க நினைப்பதும் அஸமஞ்ஜஸமாகும்.

8. இன்னமும் சில விசேஷங்களும் இங்கு ஆராய்ச்சியில் விளங்கும். கேண்மின்; ஆச்சான்பிள்ளையின் தத்வத்ரய விவரணக்ரந்தத்திலிருந்து ஏழுதடவை மேற்கோள் எடுத்துக் காட்டியருளாநின்ற மாமுனிகள்,

"என்று விவரணத்தில் ஆச்சான்பிள்ளையும்" என்று மூன்றிடங்களில் எழுதியுள்ளார்;

"என்று தத்வத்ரய விவரணத்தில் ஆச்சான்பிள்ளை" என்று நான்கிடங்களில் எழுதியுள்ளார். இவ்வெழுத்துவாசியைப்பற்றி அவச்யம் ஆராயவேண்டுமன்றோ. சிலவிடங்களில் (விவரணத்தில்) என்று மாத்திரம் எழுதவானேன்? சிலவிடங்களில் (தத்வத்ரயவிவரணத்தில்) என்று எழுதவானேன்? என்று கேட்டால், இதுவொரு கேள்வியோ வென்று அதிக்ஷேபந் தவிர வேறு அறியார் பிறர். இது மற்றையோருடைய ஸ்ரீஸூக்தியன்றே; மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியல்லவா? என்று இந்த சிந்தனை இடையறாது நெஞ்சில் குடிகொண்டிருக்கவேணும். ஸ்ரீவானமாமலைஸ்வாமிகள் இந்தநுட்பமறிந்து தெரிவித்தருளியிருக்கும் விசேஷம் நெஞ்சையுருக்குகின்றது. விவரிக்கின்றோம் கேண்மின்:

9. ஆச்சான்பிள்ளையருளிச் செய்த தத்வத்ரய விவரணக்ரந்தத்தில் இரண்டு ப்ரகாரங்கள் அமைந்துள்ளன. (1) ஸம்க்ஷிப்தமான பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை இடையிடையே யெடுத்துக்காட்டி அதன் விவரணம் செய்யும் ப்ரகாரம் ஒன்று; (2) ச்ருதப்ரகாசிகையில் பலவிடங்களில் மூலமான ஸ்ரீபாஷ்யத்தோடு தொடர்பில்லாமே ஸ்வதந்த்ரமான விவரணங்கள் காட்டுவதுபோல, பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியைப் பற்றினதாகவல்லாமல் ஆச்சான்பிள்ளை தாமாகவே விவரணங்கள் காட்டியருளும் ப்ரகாரம் மற்றொன்று. இவற்றுள் முந்தின ப்ரகாரமுள்ள விடங்களிலே—"**என்று விவரணத்தில் ஆச்சான்பிள்ளை**" என்றருளிச் செய்வர்மாமுனிகள். பிந்தினப்ரகாரமுள்ள விடங்களிலே—"**என்று தத்வத்ரய விவரணத்தில்**" என்றருளிச் செய்வர். **விவரணத்திலே** யென்றது—பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை விவரிக்குமிடத்திலே யென்றபடி. **தத்வத்ரயவிவரணத்திலே** யென்றது அப்பெயர்பூண்டதொரு க்ரந்தத்திலே யென்றபடி.

10. இந்த ஆராய்ச்சியினால் தேறுவதென்ன? பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திக்கு விவரணம் செய்தருள்பவராக நன்கு தேறுகின்ற ஆச்சான்பிள்ளையைப் பெரியவாச்சான்பிள்ளையேயாகப் பேசுவது ஸர்வாத்மநா அஸம்பத்தமென்று தேறிநிற்கும். இதனால், பெரியவாச்சான்பிள்ளையின் ஒரு க்ரந்தத்திற்கு விவரணமாகவே ஆச்சான்பிள்ளை க்ரந்தமெழுதியுள்ளாரென்று சொல்வதாகக்கொள்ள வொண்ணாது. வாதிகேஸரிஜீயர் தத்வநிரூபணக்ரந்தமெழுதியதுபோலே ஆச்சான்பிள்ளையும் ஸ்வதந்த்ரக்ரந்தமாகவே தத்வத்ரய விவரணமென்பதை யெழுதினார். அதில் ஆங்காங்குப் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளும் ஆவச்யகதைக் கேற்ப எடுத்து விவரிக்கப்படுகின்றன. பெரியவாச்சான்பிள்ளையின் க்ரந்தம் ப்ரகரணவிபாகவிசிஷ்டமன்றிக்கே ஸமுதிதமாகவுள்ளது; ஆச்சான்பிள்ளையின் க்ரந்தம் அங்ஙனன்றிக்கே ப்ரகரணவிச்சேத விசிஷ்டமானது—என்றிவ்வளவும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளினால் தெள்ளிதாக விளங்காநின்றது. இந்தத் தெளிவை நமக்குச் செவ்வனே பிறப்பித்த ஸ்ரீவானமாமலை வித்வத் ஸ்வாமிகளுக்குத் தலையல்லால் கைம்மாறிலேன்.

11. உபதேச ரத்தினமாலையில் மூன்று பாசுரங்களில் பெரியவாச்சான்பிள்ளையைப் பற்றி அருளிச் செய்யாநின்ற மாமுனிகள் முதன் முதலாக ஒருதடவைமாத்திரம் பெரியவாச்சான்பிள்ளையென்று அருளிச் செய்துவிட்டு, அடுத்த இரண்டு பர்யாயங்களில் ஆச்சான்பிள்ளையென்றே அருளிச் செய்யலாமாயிருக்கவும் சோம்பாது மூவிடங்களிலும் பெரியவாச்சான்பிள்ளையென்றிட்டே பாசுரந் தொடுத்தருளியிருப்பதனால் அவருடைய திண்ணமான வுறுதியொன்று அசைக்கமுடியாதபடி நன்கு தெரிகின்றது. அதாவது, 'பெரியவாச்சான்பிள்ளையைப் பெரியவாச்சான்பிள்ளையென்றே யெழுதியாக வேண்டும்; ஆச்சான்பிள்ளையென்கிற ஸாதாரணமான சொல்லால் வ்யபதேசிக்கத் தகுந்தவரல்லர் பெரியவாச்சான்பிள்ளை' என்னுமிவ்வுறுதி மாமுனிகளுக்குள்ளது. இதை நிஷ்பக்ஷபாதர்கள் நெஞ்சிற்கொள்ள ஒன்றேசான்று. ஊக்கமுடன் கேண்மின்.

12. மணவாள மாமுனிகளின் திருவாக்கில் ஆச்சான்பிள்ளையென்று இருபத்திரண்டிடங்களிலன்றோ வந்துள்ளது. இவ்விருபத்திரண்டிடங்களிலும் பெரியவாச்சான்பிள்ளையே ஆச்சான்பிள்ளை யெனப்படுகிறார் என்பது பிறருடைய கொள்கையாயிருக்கவேண்டும். இதையே ஸித்தாந்தமாகக் கொள்ளுமவர்கள் இவ்விருபத்திரண்டிடங்கள் தவிர இருபத்து மூன்றுவதாக மற்றோரிடந்தன்னிலும் ஆச்சான்பிள்ளையென்று மாமுனிகளின் ப்ரயோகமிருப்பதாகக் கண்டால் அவ்விடத்திலும் பெரியவாச்சான்பிள்ளையே விவக்ஷிதரென்று கொள்ள வேணும். அப்படி கொள்ள முடியாதபடியை நிரூபிக்கக் கேண்மின் ;—

13. பெரியாழ்வார் திருமொழியில் (3—9—4) * மாற்றுத்தாய் சென்று பாசுரத்தின் மாமுனிகளது வியாக்கியானத்தில் ஆச்சான்பிள்ளையென்று ஒரு வ்யக்தி நிர்தேசிக்கப்பட்டிருப்பதைக் கட்கூடாகக் காணலாம். அந்தவ்யக்தி பெரியவாச்சான்பிள்ளையல்லர் என்பதைப் பிறரும் இசைந்து தீரவேண்டிய அவசியமுளது. பிடிவாதத்திற்காகவும் பெரியவாச்சான்பிள்ளையைப் பொருளாகக் கொள்ள முடியாதவிடம் அது. ஆகவே, அப்படி இதர

ஸாதாரணமான சொல்லையிட்டு மாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை நிர்தேசிக்க நெஞ்சிலும் நினையார் என்று நிரூபகர்களேயன்றோ நிலையிடவல்லார்.

14. ஸாதுஸாத்விகஸம்வாதத்தில் (பக்கம் 14ல்) ஸ்ரீவசந பூஷணம் பதினோராவது சூர்ணையின் வியாக்கியானத்திலே "இவ்வுபதேசக்ரமம் இவர்தாமருளிச் செய்த பரந்தபடியிலும் ஆச்சான்பிள்ளையருளிச் செய்த பரந்தரஹஸ்யத்திலும் விஸ்தரேண காணலாம்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்தியையெடுத்துக் காட்டி "இதனால் பிள்ளை லோகாசார்யருடைய பரந்தபடிக்குப் பிற்பட்டதே பரந்தரஹஸ்ய மென்று நிஸ்ஸந்தேஹமாக நிரூபிக்கப்பட்டுவிட்டது; மாமுனிகளின் திருவுள்ளத்தினால் பரந்தரஹஸ்யம் பிள்ளை லோகாசாரியர்க்கு முற்பட்டதென்று க்ருஹீத மாயிருந்தால் 'இவ்வுபதேசம் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்த பரந்தரஹஸ்யத்திலும் இவர் தாமருளிச் செய்த பரந்தபடியிலும் விஸ்தரேண காணலாம்' என்றே ஸ்ரீஸூக்தி விந்யாஸம் அமைந்திருக்கு மென்பதில் ஸந்தேஹமுண்டோ?" என்று உயிரான விஷயம் தெரிவிக்கப்பட்டிருந்தது. அதற்குப் பிறர் எழுதியிருப்பதாவது—

> "ஆச்சான்பிள்ளையருளிய பரந்த ரஹஸ்யத்திலும் இவர் தாமருளிய பரந்தபடியிலும்—என்று (மணவாள மாமுனிகள்) எழுதினால் இவர்தாம் என்னும் பதம் சற்றுமுன் எடுக்கப்பட்ட ஆச்சான்பிள்ளையைக் குறிக்கிற தென்று பலர் ப்ரமிக்கக் கூடுமாகையால் அங்கு அப்படி ஸூக்திவிந்யாஸம் செய்திருக்கிறார் மாமுனிகள். மேலும் ஒரு க்ரந்தத்துக்கு வியாக்கியானம் செய்யும்போது க்ரந்த கர்த்தாவே மற்றொரு க்ரந்தத்தில் இவ்விஷயத்தைச் சொல்லியிருக்கிறாரென்று காட்டிவிட்டுப் பிறகு மற்றவர்களுடைய க்ரந்தத்திலிருந்து ஆதாரம் காட்டுவது வழக்கம்" என்று.

இப்படி விஷயத்திற்கு விஷயம் சொன்னால் உடனே நாம் ஸாதுவாக பதில் விஷயம் சொல்லக் காத்திருக்கிறோம். மேலே காட்டிய பிறருடைய வார்த்தைகள் வாதமுறையில் யுக்தமானவையே. ஆனால் இது தவறானவாதமென்றும் மணவாள மாமுகளின் ஸ்ரீஸூக்திகளில் அவகாஹனமில்லாமையினால் தோன்றிய தென்றும் பண்டிதர் பாமரர் அனைவரும் எளிதாகத் தெரிந்து கொள்ளும்படி இதோ தெரிவிக்கிறேன்.

15. ஸ்ரீவசநபூஷணத்தில் (180) "தன்னைத்தானே முடிக்கையாவது அஹங்காரத்தையும் விஷயங்களையும் விரும்புகை" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மாமுனிகள் இரண்டு ஸம்வாத ப்ரமாணங்கள் காட்டியருளுகிறார்—ஒன்று எம்பெருமானாருடைய கத்ய ஸ்ரீஸூக்தி; மற்றொன்று பிள்ளைலோகாசார்யருடையதேயான முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி. இங்கு மாமுனிகளின் திவ்யஸூக்தியமைந்திருக்கிற விதம் காண்மின்—"......*மனோவாக்காயை: என்று தொடங்கி மூன்று சூர்ணையாலே ஸகலவிரோதி நிவ்ருத்தியையும் பாஷ்யகாரர் அருளிச் செய்தது. இவர்தாமும் முமுக்ஷுப்படியிலே......இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும் என்றாரிறே." என்றிவ்விதமாகவேயுள்ளது மாமுனிகளின் திவ்ய ஸூக்தி.

16. இதில் அடைவுதப்பாமல் எம்பெருமானாருடைய ஸ்ரீஸூக்தியை முன்னே எடுத்துப் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியைப் பின்னே யெடுத்திருப்பதானது நம்முடைய நிரூபணத்தை அசைக்கமுடியாததாக ஊர்ஜிதப்படுத்துகின்றது. எந்த க்ரந்தத்திற்கு வியாக்கியானம் செய்யப்படுகின்றதோ, அந்த க்ரந்தமருளிச்செய்தவரே மற்றோரிடத்தில் ஒன்று அருளிச்செய்திருந்தால் அதைத்தான் முன்னம் எடுத்துக்காட்ட வேண்டுமென்றும், ஆனபடியினாலேயே ஸ்ரீவசன பூஷணை 11ல் பிள்ளை லோகாசார்யருடைய பரந்தபடி ஸ்ரீஸூக்தியை முன்னேகாட்டி ஆச்சான்பிள்ளையின் பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்தியைப் பின்னே காட்டினாரென்றும், அதனால் ஆச்சான்பிள்ளை பிற்பட்டவரென்பது தேறுதென்றும் பிறர் எழுதியது தவறென்று முடிந்தது.

17. வேறோராசிரியரை முன்னே காட்டிவிட்டு உடனே இவர் என்றால் அச்சொல் முன்னே காட்டியவரையே குறிக்குமித்யாதியாகப் பிறர் எழுதினதும் பழுதென்று முடிந்தது. எப்படி? இப்போது நாமெடுத்துக் காட்டியவிடத்தில்—"பாஷ்யகாரர் அருளிச்செய்தது;

இவர் தாமும் முமுக்ஷுப்படியிலே" என்கிற ஸ்ரீஸூக்தி பிறர்க்கு வஜ்ரகுடாரமாக இருக்கின்றதன்றோ.

18. ஆக இவ்வளவும் பிறருடைய பதிலுரைக்கு நாம் நேர்நின்று ப்ராமாணிகமாக பதிலுரைத்தபடி. **இவர்** என்று குறிப்பிடவேண்டுமிடங்களையும் **அவர்** என்று குறிப்பிட வேண்டுமிடங்களையும் மணவாளமாமுனிகள் மிக நன்றாக அறிந்தவர். பண்டிதரோடு பாமரரோடு வாசியற ஒருவரையும் ப்ரமிக்கச்செய்யமாட்டார் மாமுனிகள். தத்வத்ரயத்தில் 160-ஆம் சூர்ணையின் வியாக்கியானத்தில் **இவர் அவர்** என்கிற நிர்தேசவாசியைக்கண்டு தெளிக. இதைத் தகர்த்துப்பிறர் எவ்வளவுஎழுதினாலும் கோபதாபமின்றியே நாம் உடனே அறிஞருகக்க அழகியபதில்விடுக்க ஸஜ்ஜராயிருக்கிறோம். ஒருகாலும் தளரமாட்டோம். நிந்தையினால் முடிவுகட்டமாட்டோம். நாம் க்ரஹித்திருக்கிற விஷயம் உள்ளபடி யதார்த்தமாகையினாலேயே எதற்கும் தளராமலும் தீவழியிற் செல்லாமலும் ஆர்ஜவத்துடன் விடையிறுத்துவருகிறோம். பிறருடைய க்ரஹணம் அயதார்த்தமாகையினாலேயே அவர்கள் நிந்தாத்யாயங்களையிட்டே நிரப்பவேண்டியதாகிறது. இதை நாமெடுத்துக் காட்டாமலே மத்யஸ்த மஹநீயர்கள் எளிதாகத் தெரிந்துகொள்வர்கள்.

19. ஆக, ப்ராக்ருத விவாதவிஷயம் வெகு அழகாக முடிந்தபடியைச் சொல்லி முடிக்கிறோம். அடைவுதவறாமல் அருளிச்செய்யும் விரதமுடைய மணவாள மாமுனிகள் பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திக்குப்பிறகே ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டியிருத்தலால் இந்த ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையல்லர். அவராயிருந்தால் பிள்ளைலோகாசாரியர்க்கு முன்னே காட்டியிருக்க வேண்டும். இவ்வண்ணமாகவே, [அஷ்டாத்யாயியில் விரிவாக நிரூபித்தபடி] நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டர்க்குப் பிறகும் ஆச்சான் பிள்ளையை யெடுத்திருக்கையாலே அவர் அந்த பட்டரைக் காட்டிலும் பலவிதத்திலும் மேம்பாடுடையவரான பெரியவாச்சான்பிள்ளையாக இருக்கத் தகுதியே கிடையாதென்று நாம் எழுதியதும் சிலாசாஸனமாக வெற்றிபெற்றது. நடுவில்திருவீதிப்பிள்ளையானவர் பட்டர் ஸந்ததியாகையாலே பெரியவாச்சான்பிள்ளையைக் காட்டிலும் அவரே மேம்பட்டவரென்று பிறர் கூறுவது ஸம்ப்ரதாயஜ்ஞகோஷ்டியில் விலை செல்லாது. பட்டர் ஸந்ததியென்று ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியிலே பஹுமான விசேஷங்கள் பெறலாமத்தனை; நம்பிள்ளை கோஷ்டியில் பெரியவாச்சான்பிள்ளைக்கு முன்னே வந்து வீற்றிருக்க அவர்க்கு அர்ஹதையில்லையென்பது வர்ஷசதமானாலும் அப்ரகம்ப்யமாயேயிருக்கும்.

20. பிறருடைய வாதத்தில் புதிதாகவொன்று தலைகாட்டியிருக்கின்றது; தத்வத்ரய வியாக்கியானத்திற்கு ஒரு மஹான் அரும்பதம் (?) எழுதியிருப்பதாகவும் அவர் 'ஆச்சான் பிள்ளை—பிள்ளைலோகாசார்யருடைய பரமாசார்யர்' என்று குறித்திருப்பதாகவும் நூதன வார்த்தையொன்று வெளிவந்துளது இந்த அஸம்பாவிதோக்தியைக்கண்டு விவேகிகள் ஒருகாலும் மருளமாட்டார்கள். பரமாசார்யர் என்னுஞ் சொல்லுக்கு என்னபொருளென்பதை ஸம்ஸ்க்ருதஜ்ஞானமுடையார் அறிவர்கள். ஆசார்யர், ப்ராசார்யர், பரமாசார்யர் என்று அடைவே சொல்லுவது. ஸ்வாசார்யருடைய ஆசார்யர்க்கு ப்ராசார்ய ரென்று பெயர். அவருடையவும் ஆசார்யர்க்குப் பரமாசார்யரென்று பெயர். ஆச்சான்பிள்ளையைப் பிள்ளை லோகாசார்யர்க்குப் பரமாசார்யரென்றால் அவர் நம்பிள்ளைக்கும் ஆசார்யரான வொருவர் என்று முடிந்தது. அப்படியிருக்கலாம். பெரியவாச்சான்பிள்ளைக்கு ப்ராசார்யரானவவர் பெரியவாச்சான்பிள்ளையல்லர் என்று எளிதாகவே விவாதம் தொலைந்திட்டது.

21. அரும்பத ப்ரஸ்தாவம் வந்தபடியாலே முக்கியமான விஷயமொன்று நினைவுக்கு வந்ததைத் தெரிவிப்போமிங்கு. பெரியாழ்வார் திருமொழிக்கு மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்திற்கு அரும்பதவுரையொன்று அச்சிடப்பட்டுள்ளது. அதில் **(4—4.)** * நாவகாரியஞ் சொல்லிலாதவர் * என்கிற திருக்கோட்டியூர்ப்பதிகத்தின் தொடக்கத்தில் ஒரு விசேஷம் எழுதப்பட்டுள்ளது; அனைவருமெடுத்துக் காணலாம். (அதாவது)

பெரியவாச்சான்பிள்ளை இத்திவ்யப்பிரபந்தத்திற்கு இட்டருளியிருந்த வியாக்கியானம் நானூறுபாட்டுவரையிலும் லோபித்து நாற்பதுபாட்டுக்கேயிருந்ததென்று ப்ரஸித்தியிருந்தாலும் இடையிடையே சிலசில பாட்டுக்களுக்கு லோபியாமல் இருந்ததென்றும், அந்த ஸ்ரீஸூக்தியிலுள்ள கௌரவத்தினால் மாமுனிகள் அந்தந்த விடங்களில் தாம் புதிதாக வியாக்கியான மிடாமல் அந்தவியாக்கியான பங்க்தியையே அப்படியே எழுதிவிட்டதாகவும் தெரிகிறது; இதற்கு என்ன கமகமென்னில், மணவாள மாமுனிகளின் த்ராக்ஷாபாகமான ஸ்ரீஸூக்திகளிலும் கடினபாகம் காண்கிறதே, அதுதான்—என்று அவ்வரும்பதவுரைகாரர் பத்துவரி யெழுதியுள்ளார். இதனால் இரண்டு விஷயம் இங்கு நாம் தெரிந்துகொள்ள ப்ராப்தமாகிறது. மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளுக்குள்ள மாதுர்யம் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளுக்குக் கிடையாதென்று இவ்வுரைகாரர் பாரோரறியப் பகர்ந்து சிலா சாஸனமாக்கி வைத்திருக்கையாலே “ஏனைய வியாக்கியானமும் கரையானுக்கிரையாகியிருக்கக் கூடாதா? என்று ஸ்ரீவரவரமுனி திவ்யஸூக்தி ரஸிகர்கள் குறைபட்டது யுக்தமே யென்பது ஒரு விஷயம். இங்குப் பெரியவாச்சான்பிள்ளையென்றெழுதாமல் ஆச்சாம்பிள்ளை யென்யெழுதியிருப்பதால் இவ்வரும்பதவுரைகாரர் போன்ற பின்புள்ளார்க்கு மணவாளமா முனிகளின் தெளிவும் திடமான விரதமும் கிடையாதென்று தேறுவது மற்றொருவிஷயம். ஆக இவ்விரண்டு விஷயங்களையும் மாண்மதியோர் மதியிற்கொள்க.

22. இனி, ப்ராமாணிக மத்யஸ்த ப்ராஜ்ஞப்ரவரர்களின் ஸ்ரீமுக ரத்னங்கள்கொண்ட அஷ்டாத்யாயியணிகலனுக்குப் பிரதியாக நாமும் சிலருடைய பத்ரிகைகளை ஸம்பாதித்து வெளியிட்டுவிட்டோமென்றிருக்கும் பிறருடைய செயல் சிறிதும் பரிசுபெறாதென்பதை உள்ளபடி ரூதலிப்போம்.

23. காஞ்சீ அழகிய மணவாளஜீயரென்பவர் ஜடப்ரோலிலிருந்து ஒரு பத்ரிகையனுப்பினதாக வெளியிடப்பட்டுள்ளது. இதன் தத்துவத்தை விவரிப்போமிங்கு. இவருடைய சரித்திரத்தை அடுத்தபடியாகச் சொல்லுவோம். இவர் எழுதியிருப்பது என்ன? என்பதைப்பற்றி முன்னம் விமர்சிப்போம். தேசாந்தரியாகத் தாம் ஜடப்ரோல் க்ராமம் வந்திருப்பதாகவும் கையில் ஸம்ப்ரதாயக்ரந்த மொன்றுமில்லையாகவும் நாலுமாதங் கடந்தபின் திருநாராயணபுரம் சென்று சேர்ந்து அங்கே பார்த்துக்கொள்வதாகவும் இந்தஜீயர் எழுதி முடித்துவிட்டார். இது யுக்தமே. விவாத க்ரந்தங்களை இவர் வாசித்துப் பார்த்ததாகவே காட்டிக்கொள்ளவில்லை, விஷயங்களில், அபிப்ராயமொன்றும் கொடுக்கவுமில்லை. இடையில் அற்புதமாகச் சிலவாசகங்கள் எழுதியுள்ளார்—

“அமர்யாத: க்ஷுத்ர:” இத்யாதி தசாவதார புருஷனாய் தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி லோகக்ஷோபம் செய்துவரும் ம்ருத ப்ராயனான அதிகாரிக்கு ஷோடச கர்மம்போல் ஷோடசாத்யாயி நடந்தாலும் ஓராண்வழியாய் உபதேசித்துவந்த ஸத்ஸம்ப்ரதாய சித்தரான முன்னோர்களின் கோஷ்டியில்சேர ஸபிண்டீகரண யோக்யதை கிடையாது”

என்கிற வார்த்தைகள் இவருடைய கடிதத்திலுள்ளன. இவை யாரைப்பற்றி யெழுதியவை? இவற்றுக்கு என்ன அர்த்தம்? என்று ஒரு ஸதஸ்ஸில் விசாரமெடுத்துக்கொண்டால் இவரால் வாயைத் திறக்கமுடியுமா? ஷோடசாத்யாயி யெழுதினவரைப்பற்றியே இந்த வாசகங்கள் அவதரித்துள்ளனவென்று பலர் அபிப்ராயப்படுகிறார்கள். சொல்லின் பொருள் இன்னதென்று தெரிந்தபிறகன்றோ மற்றவிசாரம். ஷோடசம் ஸபீண்டிகரணம் இத்யாதி வார்த்தைகளை அஸ்தானே நிரப்பி ஒரு உத்தமாச்ரமி யெழுதத் தகுமா? உள்ளே பொங்கிக் கிடக்கிற கோபதாபங்களேயன்றோ இச்சொல் வடிவமெடுத்து வெளிவந்திருக்கின்றன. இப்படி தப்புந்தவறுமாக அபசப்தபுஞ்ஜமாக எழுதுகிறவொரு யதியை உலகில் கண்டதுண்டோ? இதை வெளியிட்டுக்கொண்ட வக்கீலுக்குத்தான் என்னபயனோ? என்னபுகழோ? என்னகௌரவமோ?

24. இந்த ஜீயருடைய உலகமறிந்த சரித்திரத்தைச் சிறிது கேண்மின். இவர் இளமையில் காஞ்சீபுரத்தில் வாழ்ந்து அடியேனுடைய ஆசார்ய ஸ்வாமி யேற்படுத்தியிருந்த பாட

சாலையில் காவ்யபாடம் சொல்லிக்கொண்டிருந்து அடியேன்கையால் இரண்டுவருஷகாலம் சம்பளம் பெற்று ஜீவித்துவந்தவர். பிறகு ஸ்ரீபெரும்பூதூர் பாடசாலைக்குச் சென்று சேர்ந்து அங்கும் ஏழெட்டுவருஷகாலம் காவ்யபாடம் சொல்லிவந்தார். அப்பாடசாலை காலேஜ்ஆக மாறினவுடனே அவ்விடத்தில் அநதிகாரேண விலக்குண்டு சோளஸிம்ஹபுரம் பாடாசலைக் குக் காவ்ய பாடகராய்ச் சென்று சேர்ந்தார். இவர் சென்ற லக்நபலாத் அப்பாடசாலையும் காலேஜாக மாறிவிடவே அங்கும் விலக்குண்டு காஞ்சீபுரம் வந்து சேர்ந்து தேசாந்தரிக் கட்டளைகளினல் தேஹயாத்திரை நடத்திவந்த காலத்தில் அழகிய மணவாள ஜீயர்மடத்தில் அபிஷேகம் பெறவிரும்பி அதற்குரிய முயற்சிகளைச் செய்யும்படி அடியேனை ஆறுமாதகாலம் நிர்ப்பந்தித்து வந்தார். "அந்த ஆச்ரமத்திற்கும் ஆஸ்தானத்திற்கும் தேவரீருடைய சர்யைக் கும் வெகுதூரமாயிற்றே; இதில் தேவரீர் நப்பாசை கொள்வது நன்றாயில்லையே" என்று உள்ளவாறுரைத்துத் தடுத்து வந்தேன்; ஆனாலும் ஜீவிக்கவழியில்லையே யென்று மிகமிக வருந்தி, சர்யைகளை மாற்றிக்கொள்வதாகவும் ப்ரதிஜ்ஞைபண்ணி மஹதா ச்ரமேண ஆச்ரமம் பெற்றார். * ஸ்வபாவோ துரதிக்ரம: ஆகையாலே ஸகலஸ்வாமிகளுடையவும் வெறுப் புக்கிலக்காகி வந்தார். காஞ்சியை விட்டகன்று காஞூரிலும் காட்டுபாக்கத்திலுமலைந்து கடைசியாக ஜடப்ரோல் சேர்ந்து அங்கொரு கைங்கரியம் ஆரம்பித்திருப்பதாக நமக்குத் தெரிவித்தார்.

25 இவர் பூர்வாச்ரமத்தில் யாளிவாஹன ஸ்வாமி யென்று ஒரு விருது பெற்றிருந் தார். தேவப் பெருமாளுடைய யாளிவஹந மஹோத்ஸவத்தினன்று இவர்க்கொரு பெரும் புகழ் விளைந்ததாம்; அதனல் அந்த விருது கிடைத்ததாகச் சொல்லிக்கொண்டிருந்தார். அதையிட்டு இப்போது ஸகல திவ்யதேசங்களுக்கும் யாளிவாஹனம் செய்வித்து ஸமர்ப் பிக்கவேணுமென்று தாம் விரதம் பூண்டிருப்பதாகவும் அதற்காகப் பல பாஷைகளிலும் பத்திரிகைகள் அச்சிட்டனுப்புவதோடு தெரிந்த விடங்களுக்குச் சிபார்சுகடிதங்களும் சேகரித் தனுப்ப வேணுமென்றும் ஸந்தேசங்கள் பல முறையனுப்பினர். இது வீணன முயற்சி யென்றும், இதில் தலையிட அடியேனுக்கு ஸௌகர்யமுமில்லை விருப்பமுமில்லை யென்றும் அடியேன் தெரிவித்திருக்கிறேன். இதிலிருந்து இவருடைய சித்தவ்ருத்தி என்னயிருக் கிற தென்பதை எம்பெருமானே அறியவேணும்.

26. ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபத்திற்காக ஜடப்ரோல் வந்திருப்பதாக எழுதுகிறாரிவர். அங்கு யாரிடம் ஸ்ரீபாஷ்யம் ஸேவிக்க இவர்வந்திருக்கிறாரென்பதை அங்கு நேரில்சென்று ஒவ்வொருவரும் கட்கண்ணல் காணலாம். "உலகோவுறங்குமே" என்று நம்மாழ்வார் அருளிச்செய்திருப்பதால் உலகமெல்லாம் உறங்கிக்கிடப்பதாக இவருடைய எண்ணம் போலும். * அஜ்ஞத்வம் அகுலீநத்வம் காஷாயேண பிதீயதே * என்றொரு ப்ரமாணவசன முண்டு. "காஷாயமானது உடம்பைமறைப்பதன்று, அஜ்ஞானத்தையும் அநபிஜாதத்வத் தையும் மறைக்கவந்தது" என்று முன்னோர்கள் மொழிந்திருப்பதை நம்பியிருக்கிறாரிவர்.

27. "உமக்கும் அவர்க்கும் என்ன ஸம்பந்தம்?" என்று ஒருவர் கேட்க; ஸ்வ க்ராஹகய்மக்ராஹ்யத்வம் ஸம்பந்த: என்றாராம் ஒருபண்டிதர். அவ்விதமாகச் சொல்லக் கூடிய ஸம்பந்தமும் ஸ்ரீபாஷ்யத்திற்குமிந்த ஜீயர்க்குமில்லையேயென்று ஆஸூரிஸ்வாமியின் அருள்மொழி. பெண்டிர்க்குக் கும்மிப்பாட்டும் சோபனப்பாடல்களும் கற்பிக்கவந்திருக் கிறேனென்று உண்மையையுரைப்பதன்றோ உத்தமாச்ரமிக்கு உரியது. இதெல்லாம் எங்ஙனேயாயினுமாகுக. இந்த யதி அஷ்டாத்யாயியையோ அதற்குப் பிறகு தோன்றியவற்றை யோ சிறிதும் பாராதவர்: பார்க்க அதிகாரமுமற்றவர். ஸ்ரீசைலேசதயாபாத்ரமுமறியாத விவர் ப்ரக்ருதவிவாதத்தில் தலையிட ஸர்வாத்மநா அநதிகாரியாகையால் அதைத்தாமே தெரிந்துகொண்டு "இப்போது ஒரு அபிப்ராயமுங் கொடுக்க என்னிடம் புத்தகமொன்று மில்லையே" என்று வெகுகம்பீரமாக எழுதுவிட்டார். ஆகவே மடாதிபதியின் அபிப்ராயம் பெற்று வெளியிட்டு விட்டதாக அபிமானிப்பது அபஹாஸ்யமென்று முடிந்தது. இவர் மடாதிபதியா அமடாதிபதியா என்பது எண்டோமெண்டு போர்ட்டில் விசாரிக்கத்தக்கது.

28. அடுத்தபடியாய் “நேமிநாத்மஹாராஜ் அவர்களின் ஸ்ரீமுகம்—ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்ப்பு” என்று வெளிவந்திருப்பதை ஆராய்வோம். இவர் எந்தவூரிலிருந்து எந்ததேதியில் கடிதமெழுதியுள்ளாரென்பது அடியோடு காட்டப்படவில்லை. விவாத நூல்களைப் பெற்றுப்படித்து விஷயங்களை ஆராய்ச்சி செய்து அபிப்ராயம் கொடுக்கிறவழியில் இவரும் அடியோடு செல்லவில்லை. “அண்ணங்கராசார்ய ஸ்வாமிக்கு உயர்ந்தபடிப்பும் பல விஷயங்களைப்பற்றி யெழுதும் சக்தியும்” இருப்பதாக இவருடைய கடிதத்தினிடையே உள்ளது. இது சூர்ப்பணகையின் அனுகாரம்போலும். நிற்க. “ஜகதாசார்யரென்று பட்டம்வைத்துக்கொண்டிருக்கிறார்; அவர் எப்படி ஜகதாசார்யரென்பது பகவானொருவர்க்குத்தான் தெரியும்” என்று ஊடேயெழுதுகிறார். ப்ரக்ருதவிஷயத்திற்கும் இதற்கும் என்ன ஸம்பந்தம்? எந்த புத்தகத்திலாவது நாம் நம்மை ஜகதசார்யரென்று வெளியிட்டுக்கொண்டிருக்கிறோமோ? இருந்தால் அதையெடுத்துக்காட்டி எவ்வளவும் ஆரவாரம் செய்யலாம். சொல்வடிவம் என்ன இருக்கிறது? அதற்குப் பொருளென்ன? என்பதைச்சிறிதுமாராயவொட்டாமல் தடுப்பது அஸூயை. ப்ரஸக்திவந்தபடியால் உண்மையை விவரிக்கிறோம்.

29. பல்லாயிரம் ரூபாய்ச் செலவில்—ஏறக்குறைய லக்ஷம்ரூபாய்ச் செலவில் நாம் 1939 ௵த்தில் காஞ்சியில் தேவப்பெருமாள் ஸந்நிதிவாசலில் அமைத்திருக்கிற ஜகதாசார்ய ஸிம்ஹாஸனத்தை உலகமெல்லாம் கண்ணாரக் காணா நின்றது. அதற்குநாம் அதிபதியென்பது பற்றி ஜகதாசார்யஸிம்ஹாஸநாதிபதி யென்று நமக்குப் பெரியார் விருது சாத்தியிருப்பதுண்டு;

“ஜகதாசார்யமஹாலய ஸம்ஸ்தாபநரூபதிவ்யக்ருத்யேந,
ஜகதாசார்யமஹாஸநபதிரிதி பிருதேந பூஷிதோயமபூத்.”

என்று அன்பர்கள் வெளியிட்டுள்ளார்கள். இன்னான் இன்ன க்ருஹத்துக்குத் தலைவன் என்று சொல்லிக்கொண்டால் அதில் யாரேனும் பொறாமைப்பட அவகாசமுண்டோ?

30. ஜகதாசார்யர் என்றே நாம் நம்மை வெளியிட்டுக்கொண்டோமென்றே வைத்துக்கொள்வோம். அதற்குப் பிறர் பொறாமைப்பட்டு முடிந்துபோகலாமேயொழிய வேறு என்ன செய்ய முடியும்? ஜகத்குருவென்று பெயர்புனைந்துள்ளாரையும் இவரே குறிப்பிடுகிறார். எந்த ஜகத்துக்கு அவர்கள் குரு? அதைப்பற்றி இவர் எவ்வளவு தெரிந்துகொண்டிருக்கிறார்? ஆயிரம்பேர்களுக்கு குருவானவொருவர் ஜகத்குருவானால் ஆயிரம்பேர்களுக்கோ ஐம்பதுபேர்களுக்கோ ஆசார்யராமவர் ஜகதாசார்யராக ஆக முடியாதோ?

31. அஸ்மதாசார்யபாதர் ஜகத்குரு அனந்தாசார்ய ஸ்வாமி யென்று ப்ரசித்தர். அவர் தம்மை ஜகத்குருவென்று சொல்லிக்கொள்ளவுமில்லை எழுதிக்கொள்ளவுமில்லை. “ஜகத்குரு பகவத் ராமாநுஜாசார்ய ஸிம்ஹாஸநாஸீநா: அநந்தாசார்ய ஸ்வாமி பாதா:” என்பதே அவ்வாசிரியரின் திருமுகங்களிலுள்ள வாசகம். “தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர” என்று தேசமறியக் கொண்டாடப்பெற்ற எம்பெருமானார்க்கு விசேஷணமாகவே அவர் ஜகத்குரு வென்றிட்டது. அந்த மருமமுணராமல் அப்போராசிரியர் பக்கலிலேயே அந்நாளில் பலர் பொறாமையினால் அபசாரப்பட்டதுண்டு. நேமிநாத்மஹாராஜ் என்று ஆச்சரியமான கோலம்பூண்டு இப்போது வெளிவந்திருக்கிற இவரே அவ்வபசாரிகளில் தலைமைபெற்றவ ரென்பதை அடுத்தபடியாக விவரிப்போம். “உலகாரியனெனும் பேர் நம்பிள்ளைக்கோங்கி விலகாமல் நின்றதென்றும் மேல்” என்று உபதேச ரத்தின மாலையில் ஜகதாசார்யராக வருளிச்செய்யப்பட்ட நம்பிள்ளையைச் சுட்டியே நம்முடைய பிருதில் ஜகதாசார்யபதம் அமைந்திருக்கின்றதேயன்றி வேறில்லை யென்பதை வடமொழியில் ப்ரவேசலேசமாவது உள்ளவர்கள் எளிதிலுணர்வார்கள். இஃது எப்படியாயினும் ப்ரக்ருத விவாதத்தில் இந்த விவாதம் ஸர்வாத்மநா அப்ரஸக்தம். * அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே * என்றதை ஸார்த்தகமாக்க அவரவர்கள் படுமஸூயை பொங்கி வழிகின்றது. இவற்றால் ப்ரக்ருத விஷயத்திற்கு என்னாகும்?

32. "ஜகத்குரு அனந்தாசார்யஸ்வாமி இவ்வண்ணங்கராசார்யரை ஒருகாலும் மதித்ததில்லை" என்றெழுதுகிறார் இந்த நேமிநாத்மஹாராஜ். இது ஸத்யமாகவேயிருக்கட்டும். அதைப்பற்றி இங்கென்ன? அப்பேராசிரியர் பரமபதமடைந்து பதினைன்குவருஷமாகிறது. அவரைப் பற்றின ப்ரசம்ஸை இங்கொன்றுமில்லையே. "பரந்தரஹஸ்யம் பெரிய வாச்சான்பிள்ளை பணித்ததன்றென்று அனந்தாசார்யஸ்வாமி ஸாதிக்கக்கேட்டேன்" என்று நாம்எழுதியிருந்தாலாவது அவர் இவரை மதிக்கவேயில்லையென்று இந்த ஹரிச்சந்த்ரர் எழுதலாம். புத்தகத்திற்கு மதிப்புரை கொடுக்கவேண்டியவர்கள் என்னஎழுதவேண்டும்? எவ்வளவெழுதவேண்டும் என்பதை அடியோடு அறியாமலோ மறந்தோ அதிகமான ப்ரஸங்கங்களிலே காடுபாய்வதனுல் உலகம் சிரிக்குமேயொழிய வேறென்கொல்?

33. இதெல்லாம் கிடக்கட்டும். இந்தநபர் யாரென்பதை யாவருமுள்ளபடி யுணர வேண்டுவது அவசியம். இவருடைய கடிதத்தை வெளியிட்டவர் அதன்கீழ் 10வரிகள் எழுதியுள்ளார்; (அதாவது)

[இந்தஸ்வாமி காஞ்சீபுரத்தில் பிறந்தஆசார்யபுருஷர். மதராஸ் ஸர்வகலாசாலையில் M. A. பட்டம் பெற்றவர்; தென்னாட்டில் நம் ஸம்ப்ரதாயம் க்ஷீணித்து வருவதைப்பார்த்து வடநாட்டிற்கு ஸ்ரீவைஷ்ணவப்ரசாரத்திற்காகச்சென்றவர். டெல்லி, பம்பாய், கல்கத்தா முதலிய பட்டணங்களில் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்தை ஹிந்தி தமிழ் ஆங்கிலம் என்னும்பாஷைகளில் உபந்யாஸம் செய்து வருபவர். நைமிசாரணியத்தில் ஸ்ரீரங்கம்கோயிலைப்போன்ற வொருகோயில்கட்டிவருகிறார். லக்ஷக்கணக்கான சிஷ்யர்களுள்ளவர். ஐக்யமாகாணத்தில் ஆயிரக்கணக்கான ஏகர்கள் உள்ள ஒரு ஜமீந்தார்] என்றெழுதப்பட்டுள்ளது.

இதில் ஒருவார்த்தையாவது ஸத்யமாவென்பதை ஒவ்வொருவரும் காணலாம். இதைவிட பச்சைப்பசும்பொய் உலகில்வேறுகிடையாது.

34. இவரைப்பற்றின உண்மைகள் இவை:—இவர்காஞ்சீபுரத்தில்பிறந்தவர் என்றதொன்றுதான் இதில்ஸத்தியமானது. மற்றவைமுழுதும் உலகம்சிரிக்கநின்ற பொய்யுரைகள். காஞ்சீபுரத்தில் திருக்கச்சிநம்பிவீதியில் C. P. வெங்கடாசார்யரென்று (வக்கீல்) ஒரு பெரியார் இருந்தார். அவருடையபுதல்வரிவர். C. P. ராஜகோபாலாசாரியென்பது இவருடைய பெயர். 'ஆசார்யபுருஷர்' என்கிறபதம் "ராஜபுருஷ:" என்கிறசொல்போல் ஷஷ்டீ தத்புருஷனாகில் இவர் ஆசார்யபுருஷரே. இவர் ஆங்கிலம்பயின்றவர். என்ன பட்டம் பெற்றிருக்கிறாரென்பதைப்பற்றி நான் தெரிவிக்க அநதிகாரி. "தென்னாட்டில் நம் ஸம்ப்ரதாயம் க்ஷீணித்துவருவதைப்பார்த்து வடநாட்டிற்கு ஸ்ரீவைஷ்ணவப்ரசாரத்திற்காகச்சென்றவர்" என்பதுபார்க்க விலவறச் சிரிக்கவேண்டியதாகிறது. ஸம்ப்ரதாயம் எங்கு க்ஷீணித்திருக்கிறதோ அங்கல்லவோ பிரசாரம் செய்யவேண்டும். ஸம்ப்ரதாயம் கெட்டுப்போன தென்னாடு நமக்கு வேண்டாமென்று விட்டுவிட்டு வடநாடு சென்றார்போலும்.

35. அன்பர்காள்! இந்தபோலிமஹாராஜ் பாம்பே, மதுங்காவில் ஏதோ உத்யோகத்திலிருந்தவர். ஆங்குச் சிலகஷ்டங்களையடைந்து அஸ்மதாசார்யரான ஜகத்குரு ஸ்வாமியிடம் வந்து அழுது ஆச்ரயம் விரும்பினர். அவர் இவருடைய ஆர்த்திகண்டிரங்கி இவர்க்கும் இவரது குடும்பத்திற்கும் நிற்கநிழல்கொடுத்தார். "ஜீவநக்ரஹணே நம்ரா: க்ருஹீத்வா புநருந்நதா:" என்பது இயல்பாகையாலே அந்த ஸ்வாமிக்கே கொடியதீங்குகளையிழைக்கத் தொடங்கினர். அந்த ஸ்வாமி பம்பாயிலிருந்து காஞ்சிக்கெழுந்தருளினகாலத்தில் இவர் பம்பாயில் மனைகடோறும் சென்று 'இவர் எப்படி ஜகத்குருவாவர்?' இத்யாதி தூஷணப்ரசாரஞ் செய்து ஸ்ரீஸ்வாமி சிஷ்யர்களால் வெருட்டப்பட்டுக் காஞ்சீபுரமேவந்து சேர்ந்து செட்டித்தெருவில் குடியிருந்தார். அப்போது இவருடைய கஷ்டங்களையறிந்த கனவான்கள் மஹாப்ரயாஸேந ஓர் உத்யோகம் பண்ணிவைத்தார்கள். அதில் இவரடைந்த கஷ்டங்கள் உலகமறிந்தவை. அவையெல்லாம் ஹிண்டு, தினமணி, மித்திரன் முதலிய ஸகல பத்ரிகைகளிலும் ஏறியுள்ளவை.

36. பிறகு இவர் அஜ்ஞாதவாஸம் பண்ணவேண்டியதாயிற்று. உருவத்தைக் காட்டிக் கொள்ள முடியாமல் மாறுகோலம் பூண்டு [தாடிவளர்த்துக்கொண்டு] டெல்லியில் சில மஹான்களின்மனைகளில் வாராசனம் பண்ணிவந்ததை நாம் நேரில் அறிவோம். சென்ற நவம்பர் மாதத்தில் நாம் டெல்லி ஸ்ரீவைஷ்ணவமஹாஸபையில் உபந்யாஸத்திற்காக அழைக்கப் பட்டுச் சென்றிருந்தபோது இவர் அங்கு நித்யமும் உபந்யாஸத்திற்கு வந்து கொண்டிருந்தார். எவ்விதமாக? உபந்யாஸம் ஆரம்பமான பிறகு வருவர்; முடிவதற்குப்பத்து நிமிஷம் முன்னால் எழுந்துசெல்வர். ஐந்துநாளும் இப்படியேயானதைக் கண்ட அங்குள்ள பெரியார்கள் —ஸர். எஸ். வரதாசார்யர்ஸ்வாமி, C. V. ராஜன், V. S. R. சக்ரவர்த்தீ, A. ராமாநுஜம் போன்றவர்கள் இவருடையதத்துவங்களை நன்கறிவார்கள்.

37. நைமிசாரணியம் இன்னதிக்கிலிருக்கிறதென்பதும் இவர்க்குத் தெரியாது. அங்கு ஸ்ரீரங்கம் கோயிலைப்போன்ற ஒரு கோயில் கட்டி வருகிறார் என்கிறவிந்த உலகறி முழுப்பொய் யாரைமயக்கவோ? திருமங்கையாழ்வார் பாடினதாய் வடநாட்டிலுள்ளதான நைமிசாரணியத்தைத்தானே இவர் குறிப்பிடுகிறார். அங்கு 'இந்த நேமிநாத்மஹாராஜ்' ஒரு சிறுகல் நாட்டியிருப்பதாகக் காட்டிவிட்டாலும், உடனே இவர்க்கு நாம் அடிமைப்படுவோமென்பதில் ஸந்தேஹம் வேண்டா. இவருடைய தமையனாரொருவர் தாம் திருப்பாற்கடல் பார்த்திருப்பதாகவும் அங்கே க்ஷீராப்திநாதனை ஸேவித்திருப்பதாகவும் பலரிடம் சொல்லி வந்தார். மெய்தானென்றே அவர்கள் நம்பியிருந்தார்கள். ஒருநாள் ஒரு பெரியவர் மடி பிடித்துக்கேட்கையில் "காவேரிபாக்கம் போகிறவழியில் திருப்பாற்கடலென்கிற கோவிலுள்ளது; அங்கே அடிக்கடி நான் நிமந்த்ரணத்திற்குப்போய்வருவதுண்டு; அதைச் சொன்னேன்; இதில் என்ன பிசகு?" என்றார். அதுபோல் தென்னாட்டில் நைமிசாரணியமென்று ஒரு க்ராமத்திற்குப் பெயரிருக்கலாம். அங்கு ஏதாவது செய்வதாக இவர் பொருளீட்டிக்கொண்டிருக்கலாம்; அல்லது ஒன்றுமில்லாத நைமிசாரணியத்திலேயே இனி [கலியுகே த்விதீயபாதே] கோவில்கட்டுவதாகச் சொல்லி ஆங்காங்குப் பொருளீட்டிக் கொண்டிருக்கலாம். அது நமக்குத் தெரியாது. * இமையோர்நாதன்வந்திறைஞ்சும் நைமிசாரணியத்தில் இவர்க்கு ஒரு கோல்குத்து நிலமுங்கிடையாதென்பது ஸத்யம். இதற்காக நாம் ஆயிரம் இரண்டாயிரம் ரூபாயானாலும் மத்யஸ்தமஹாசயர்களிடத்தில் பொதுக்கட்டி 10, 12 மஹான்களுக்கு நைமிசாரண்யயாத்திரை செய்வித்து உண்மையை உலகுக்கு அறிவிக்கவிரும்புகிறோம். இவர் லக்ஷக்கணக்கான சிஷ்யர்களுள்ளவர் என்கிற வார்த்தையும், ஐக்யமாகாணத்தில் ஆயிரக்கணக்கான ஏகர்களுள்ள ஒரு ஜமீந்தாரிவர் என்கிற வார்த்தையும் கீழே 36வது—பாராவிலுள்ள விஷயங்களையறிந்தவர்களுக்குவெகு ஆச்சரியமாயிருக்கும். அந்த பாராவில்கண்ட விஷயங்களில் ஒரு அக்ஷரமும் பொய்யல்லவென்பதை அந்தபாராவின் முடிவில்கண்ட பெரியார்களின் கடிதங்களைக் கொண்டும் நிரூபிக்கவல்லேன். அவச்யம் ஆராய்ந்து முடிவு செய்யவேண்டிய விஷயம் இதுவேயாகும்.

38. இதை நாம் எழுதிக்கொண்டிருக்கும்போது ஸ்ரீமான் உ. வே. ப்ருந்தாவனம் ஸ்ரீரங்காசாரியர் ஸ்வாமியென்பவர் பதரிகாச்ரமயாத்திரையை முடித்துக்கொண்டு நாமிருக்குமிடத்தேவந்து தங்கினார். அவரிடத்தில் இதைப்பற்றி விசாரித்ததில் அவர் எழுதிக்கொடுத்த பத்ரிகையும் இதில் பிரசுரமாகிறது. அந்தஸ்வாமி இன்னாரென்பதை உலகமெல்லாம் அறியும். விசேஷித்து சென்னையிலும் திருவல்லிக்கேணியிலுமுள்ளார் யாவருமறிவர். அவருடைய திருவுருவப் படத்தைவிரைவில்யாவரும் ஸேவிக்கநேரும். 'நேமிநாத் மஹ்ராஜ்' என்கிற இந்தஜமீந்தாருடைய திருவுருவப்படம் அவசியம் வெளிவரவேண்டும். எங்தெந்த மடாதிபதிகள் வித்வான்கள் மஹான்கள் அடியேனுடைய உக்திகளைப் புகழ்ந்திருக்கின்றார்களோ அவர்கள்யாவருடையவும் திருவுருவப்படங்கள் வெகுவிரைவில் வெளிவரப்போகின்றன. அடியேனை தூஷிப்பவர்களாகப் பிறரால் வெளியிடப்பட்டுள்ளவர்களில் முன்னம் இந்த 'நேமிநாத் மஹாராஜ்'ருடைய உருவப்படம் வெளியாகவேண்டியது மிக அவசியம்.

39. அவருடைய வுருவப்படம் வெளியிட முடியாதென்னில், வேண்டா ; அவர் எந்தவூரில் எந்த ஜாகையில் இருக்கிறாரென்பதை "மதுரை, வக்கீல் ராவ்பஹதூர் R. நரஸிம்ஹய்யங்கார். 36, வடக்குமாசி வீதி" என்னும் விலாஸத்திற்குத் தெரிவிக்கட்டும். நேரில் சென்று தரிசனம் பண்ணி ஒரே நிமிஷத்தில் உண்மையை உலகம் தெரிந்து கொள்ளும்படி செய்துவிடுவோம்.

40. ஸ்ரீ உவே. R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், வக்கீல், மதுரை—என்பவருடைய கடிதமும் பிறரால் வெளியிடப் பட்டிருக்கிறது. இவர் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தரல்லர். பெரியவாச்சான்பிள்ளையை தூஷிக்கப்பிறந்த குடியில் தோன்றியவொருவர். தேசிகனுடைய சில ஆக்ஷேபங்களைக் கண்டித்தெழுதியுள்ள விஷயங்களைத் தாங்கி நிற்கும் பரந்தரஹஸ்யத்தைப்பற்றின சர்ச்சையில் இந்தநபர் தலைகாட்டவும் தகுதியற்றவர். இவரைப் போன்ற பலருடைய அபிப்ராயங்களை வாங்கிச் சுமைசுமையாக அச்சிடலாமே. இவரெழுதியுள்ளதையும் விமர்சிப்போம். "அண்ணங்கராசார்யஸ்வாமியின் உண்மை குணங்களை உள்ளபடி உலகுக்கு உணர்த்த நீங்கள் முன்வந்ததைப்பற்றி மிகவும் ஸந்தோஷம்" என்பது அவருடைய முதல் வார்த்தை. இதை எழுதின அவருடைய கைக்கு நூறுபவுன் எடையுள்ள ஸுவர்ணகங்கணமன்றோ சாத்தவேண்டும். அடியேனுடைய சரக்குகளெல்லாம் உள்ளபடி வெளிவருவதற்காகவேயன்றோ பரந்த ரஹஸ்ய முத்ரண ப்ரவ்ருத்தி யேற்பட்டது. "புத்தூர் வக்கீல் ஸ்வாமிகளே புகழத்தக்க பரதேய்வம்" என்று மகுடம் புனைந்த சிறந்த வியாஸமும் ஒரு பண்டிதரால் அணிகலனில் வெளிவந்திருக்கிறதே. கோயமுத்தூரில் சிறந்த அட்வொகேட் ஸ்ரீ. உ. வே. C. R. ராமஸ்வாமி ஐயங்கார் (4/2 Government College Road. Sevanivasam) என்கிற மஹாபுருஷர் 24—6—49ல் அடியேனுக்கொருவிரிவான ஸ்ரீமுகமருளியுள்ளார்; அதிலுள்ள சிலவார்த்தைகள்—"ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியை ஸேவித்துப் பரமானந்தமடைந்தேன். ஸ்ரீ. புத்தூர் வக்கீல்ஸ்வாமி அஹம்பாவத்தினால் ஏதோ செய்யப்போக ஸ்ரீவைஷ்ணவவுலகம் அதனால் மிகவும் பயன்பெற்று வருகிறது. ஸ்வாமியின் பெருமைகள் வெளியாவதற்கு அவரே முக்ய ஹேதுவாகிறாரென்று உலகமெல்லாம் அவரையே கொண்டாடவேண்டிய அவச்யமுண்டு. அவருடைய ஸுதர்சன பத்ரிகையை அடியேன் தருவிப்பதில்லை. அதில் வெளிவரும் அவதூறுகளைப் படிக்கவேண்டுமென்கிற அவச்யமுமில்லை" என்று. இதில் "ஸ்வாமியின் பெருமைகள் வெளிவருவதற்கு அவரே முக்ய ஹேதுவாகிறார்" என்பதையே மதுரை வக்கீல் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் சப்தபேதத்தாலே வெளியிட்டிருக்கிறார்.

41. இதற்குமேல் அந்த வக்கீல் எழுதியுள்ளார்—"அண்ணங்கராசாரியர் மிகவும் படித்தவரென்பதில் ஸந்தேஹமில்லை" என்று. இது * அப்ரமேயம் ஹி தத் தேஜ: * என்று மாரீசன்வாக்கில் வந்ததுபோல வென்று உலகங்கொள்ளும். இதற்குமேலும் அந்த வக்கீல் எழுதுகிறார் :—"அண்ணங்கராசாரியர்க்கு மதுரையில் சில பணக்கார சிஷ்யர்கள் இருக்கிறார்கள் ; படிப்பு இருப்பதாலும் இந்த சிஷ்யர்களின் பலத்தாலும் அவர் எவரைப்பற்றி எதுவேண்டுமானாலும் எழுதலாமென்று நினைக்கிறார்" என்று. இங்கே உலகுக்கு உணர்த்தவேண்டிய விசேஷங்கள் விரிவாகவுண்டு. சுருக்கமாகவே யெழுதி முடிப்போம். சிலவருஷங்களுக்கு முன்பு இந்த வக்கீலுள்ளிட்ட கமிட்டியாரால் தேசிகப் பிரபந்தவுரைபொன்று வெளியிடப்பட்டது. அதின் முகவுரையில் தேசிகரைப் புகழ்வதோடு நில்லாமல் பெரியவாச்சான் பிள்ளை முதலான ஸதாசார்யர்களின் தூஷணையும் சேர்க்கப்பட்டிருந்தபடியால், அதைப் பலமுகமாகத் தகர்த்து நமது அம்ருதலஹரீ பத்ரிகையில் பல வியாஸங்கள் உலகம்போற்ற வெளியிடப்பட்டன. அப்போது இவராலும் எவராலும் மறுவாய் திறக்கமுடியாதபடி சில விஷயங்கள் வெளியிடப்பட்டிருந்தன. அவை எவையென்னில் :—

42. தேசிகர் பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்தினாலாயிரப்படியை ஸேவித்து அதைக்கையிற்கொண்டே த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி பணித்தார் என்று பலபல சான்றுகளால் ஸ்தாபிக்கப்பட்டது. அன்றியும், "பெரும்பாலும் திவ்யதேசங்களிலும்

ஆழ்வாராசார்யர்களின் அவதார ஸ்தலங்களெல்லாவற்றிலும், எந்தத்திருமண்காப்பு திகழ் கின்றதோ இதுவேதான் தேசிகருடைய திருநெற்றியிலும் திகழ்ந்திருந்தது; பெரியவாச்சான் பிள்ளை பிள்ளைலோகாசார்யர் மணவாளமாமுனிகளாகிய தென்னாசார்யர்கள் அணிந்து கொண்டிருந்த திருமண்காப்பேதான் தேசிகருமணிந்து கொண்டிருந்தது" என்று பேர்க் கவும் போரதபடி நாமெழுதியிருக்கிறோம். இதற்கு ப்ரதிவாதம் பண்ணவந்தவர்களையும் பாறுபாறுக்கியிருக்கிறோம். அதெல்லாம் இந்த வக்கீலின் திருவயிற்றில் வெகுவேலை செய் கிறது. அதனால்தான் "எவரைப்பற்றி எது வேண்டுமானாலும் எழுதலாமென்று நாம் நினைப்பதாக" எழுதிவிட்டார். இவர் விவாதவிஷயத்தினுள் புகுந்து ஒரு அபிப்ராயமும் கொடுத்தவரல்லர்; கொடுக்க அர்ஹதையுடையவருமல்லர்; கொடுத்தாலும் செல்லக் கூடிய நிலையிலிருப்பவருமல்லர். "அண்ணங்கராசாரியர் மிகவும் படித்தவராதலாலும் பணக்கார சிஷ்யர்களை யுடையவராதலாலும் அவரோடு வீணாக விவாதப்பட்டுப் பங்கப்படவேண்டா" என்று எச்சரிக்கைசெய்ததே இவருடைய கடிதத்தின் ஸாரமாகத் தேறுகின்றது.

43. திருக்கோட்டியூர் உ. வே. ஸ்தானீகம் தங்கமையங்கார் ஸ்ரீமுகம் (2) பிறரால் வெளியிடப்பட்டிருக்கிறது. அவர் ஸ்ரீமத் அயோத்யா ராமாநுஜஜீயர் ஸ்வாமியின் சிஷ்யர். அவர் காலக்ஷேப ஸமயங்களில் ஆச்சான்பிள்ளையென்று வருமிடங்களில் பெரியவாச்சான் பிள்ளை விவக்ஷிதரல்லர் என்று ஜீயர் ஸ்வாமி விவரித்து விவரித்து ஸாதிக்கப் பலகால் கேட்டிருப் பதாகத் தமது மதிப்புரையில் எழுதியிருந்தவர். அதற்காக இவருடைய கடிதம் அணிகலனில் வெளி வந்ததேயின்றி இவருடைய ஸொந்த அபிப்ராயம் உத்தேச்யமாகவல்ல. தமக்கு விரோதமாக எழுதுகிறவர்களை பிறர் வாய்வந்தபடி தூஷிப்பது போல் நாம் ஒருவரையும் தூஷிக்கமாட்டோம், தூஷிக்க அவச்யமுமில்லை. தங்கமையங்கார் பரமஸாது, பரமஸாத் விகர்; மஹா பீரு. தம்முடைய கடிதத்தை வெளியிடக் கூடாதென்று அவர் எழுதியிருந்த தாகவும் அதை மீறி வெளியிட்டு விட்டதாகவுமெழுதுகிறாரிவர். இது வொன்றே போதும். அயோத்யா ராமாநுஜஜீயர் ஸ்வாமி ஸாதித்தது பொய்யென்று அவரால் எழுதமுடியுமோ? எழுதியுள்ளாரோ? பெரியவாச்சான்பிள்ளையின் பெருமை அப்படிப்பட்டது இப்படிப் பட்டது எப்படிப்பட்டது! என்றெழுதுகிறாரவர். பெரியவாச்சான்பிள்ளைக்குப் பெருமை கிடையாது, அவர்க்குப் பரந்த ரஹஸ்யமெழுதத் தெரியாது என்பதா இங்கு விஷயம். பெரியவாச்சான் பிள்ளை பெருமையை இவரைவிட நூறுமடங்கு அதிகமாக நாம் அறிந் துள்ளோம். நாமெழுதிய நூல்களிருந்துதான் உலகமே அறிந்துளது. இங்குத் தெரிவிக்க வேண்டிய மற்ற விஷயங்களை அடுத்த வெளியீட்டில் விவரிப்போம்.

44. மேலேகுறித்த தங்கமையங்கார் நமக்கு நீடித்தகாலநண்பர் என்று தெரிவித் திருப்பது ஸத்யமானது. * பஹி: ப்ராண இவாபர: * என்னும்படியான நண்பரேயவர். ஆனால் நமக்கு அவர் ஸப்ரஹ்மசாரியென்று எழுதியிருப்பதானது வடமொழிபயிலாமை யினாலத்தனை. ஒரே ஆசார்யரிடத்தில் ஸஹ அந்வயித்துக் காலக்ஷேபம் செய்தவர்களை ஸப்ரஹ்மசாரியென்பது. தங்கமையங்காருடைய ஆசார்யர் அயோத்யாராமாநுஜஜீயரென்று அவர் எழுதிக் கொண்டதனாலும் சிலஸமயம் நேரில்சொன்னதனாலும் அறிவோம். மற்றபடி அடியேனுடைய வேதாந்த ப்ரவசநகோஷ்டியில் பலகால் அந்த தங்கமையங்கார் ச்ரோதா வாக அந்வயித்திருப்பதுண்டு; அவரும் நாமும் சேர்ந்து ஒரு ஆசார்யர்பக்கலிலே ச்ரோதாக் களாக இருந்தது இப்பிறப்பில் இல்லை. அஸத்யம் தவிர வேறு எழுதுவதில்லையென்று விரதம் பூண்டிருப்பதனாலோ, ஸம்ஸ்க்ருதபாஷையறியாமையினாலோ தவறாக எழுதின விதனை அந்தத் தங்கமையங்காரே சிக்ஷிப்பர்.

குருக்ஷேத்ரத்திலிருந்து ஹ்ருஷீகேசத்திற்குப் பயணமாகிறோம்.

மாமுனிவனருள் வெற்றி முற்றிற்று.

ஸ்ரீ:

# அனைவரும் அன்புடன் நோக்கத்தக்க அவச்யமான விண்ணப்பம்.

(ப்ர—அ.)

அடியேனுக்கு விஷயவிசாரத்தில் முழுநோக்கேயல்லது வசவு விசாரத்தில் சிறிதும் நோக்கில்லை. பிறர் தம்வாக்காலும் தமர்வாக்காலும் அஸம்பத்தமான அவதூறுகளை எவ்வளவு பிரசுரம்செய்து கொண்டாலும் அதனால் பிராமாணிகர்கள் கலங்கார்கள், அடியேனும் இறையும் வருந்தகில்லேன். பிறர் அந்த நிந்தனைகளினாலேயே த்ருப்தியடையட்டும், அடியேன் மேன்மேலும் வித்வான்கள் ஆதரிக்கத்தக்க விஷயங்களையே விளம்பி மகிழ்வேன்.

பரந்தரஹஸ்யத்திற்கு யார் கர்த்தா என்கிற விசாரம் முக்கியமன்று. மணவாளமாமுனிகள் தம்முடைய க்ரந்தங்களில் ஆச்சான்பிள்ளையென்றும் பெரியவாச்சான்பிள்ளை யென்றும் சப்தபேதந பலகால் அருளிச்செய்துள்ளாரென்பது யாவருங்கண்டது; இருபது தடவைகளுக்குமேல் ஆச்சான் பிள்ளையென்றும், நாலைந்து தடவைகள் பெரியவாச்சான்பிள்ளை யென்றும் மாமுனிகளின் திருவாக்கில் வந்திருக்கின்றது. ஆச்சான்பிள்ளையென்கிற வ்யக்தி வேறு, பெரிவாச்சான்பிள்ளை யென்கிற வ்யக்தி வேறு—என்பது அடியேனுடையவும் மற்றும் பல பெரியார்களுடையவும் கொள்கை. பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான்பிள்ளையென்றும் மாமுனிகள் எழுதுவதாகப் பிறருடைய கொள்கை.

பரந்த ரஹஸ்யகர்த்தாவைப்பற்றின விசாரத்தை வெகுதூரத்தில் விட்டிட்டு மேலேகாட்டிய இருவகைக் கொள்கைகளில் எது பொருத்தமானதென்பதை விமர்சித்து நிஷ்கர்ஷிக்கவேண்டுவது தென்னாசார்யர்கள் அனைவர்க்கும் உற்ற கடமையாகும். இதில் அடியேனுடைய ஆராய்ச்சிகளை அஷ்டாத் யாயியிலும் ஸ்ரீவைஷ்ணவமஹாநிதியிலும் விவரித்திருப்பது தவிர இத்துடன் வெளியிடப்படுகிற மாமுனிவனருள் வெற்றியிலும் மிக விரிவாக நிரூபித்திருக்கிறேன். பிறருடைய வாதங்களில் ஒன்று விடாமல், ஒவ்வொன்றுக்கும் பதில் சொல்லியிருக்கிறேன். இன்னமும் எத்தனைவாதங்கள் தோன்றினாலும் கைகூப்பிநின்று ருஜுவாக விடை கூற ஸஜ்ஜனாயிருக்கிறேன்.

வித்யார்த்தி வெளியிட்ட ஆச்சான்பிள்ளையாரு ரஹஸ்யமென்னும் புத்தகத்தில் பிறருடைய வாதங்களை எழுத்தெழுத்தாகவெடுத்து பதில் சொல்லியிருப்பதை யாவரும் காணலாம். அதன்மேல் பிறர் விஷயவிசாரங்களில் செல்லமுடியாமல் "அண்ணங்கராசாரியரே வித்யார்த்தியின் பெயரால் அப்புத்தகம் வெளியிட்டிருக்கிறார்" என்று இதையொரு பெரியவிஷயமாகக் கொண்டு தாண்டவமடித் திருப்பர். அதற்கு நாம் இப்போதே யெழுதுகிறோம்; வித்யார்த்தியின் பெயரால் நாமேயெழுதின தாகத் திண்ணமாயெண்ணிக்கொள்க. விஷயங்களை நோக்கவேணுமே யொழிய வக்தா யாரானாலென்ன? * கங்குலும்பகலும் கண்துயிலறியேன் கண்ணநீர் கைகளாலிறைப்பேன், சங்குசக்கரங்களென்று கை கூப்பித்தாமரைக் கண்ணென்றே தளர்வேன், எங்ஙனே தரிக்கேனுன்னை விட்டென்பேன் இருநிலங் கைதுழாவிருப்பேன், செங்கயல்பாய் நீர்த்திருவரங்கத்தாய் என்திறத்தெலன் செய்கின்றாயே * என்று பாடவேண்டிய பாசுரத்தை ஆழ்வார் எப்படி பாடியிருக்கிறாரென்று பாருங்கள். தாய்சொல்லுவதாகவும் தோழி சொல்லுவதாகவும் வைத்துப்பாடப்பட்ட பாசுரங்கள் நாலாயிரத்தில் ஓராயிரமன்றோ; அதைக் கொண்டு ஆழ்வார்கள் இப்படி பொய்யாகப் பாடிவைத்தார்களென்று யாரும்பழிப்பாரில்லை. அவற்றில் தேறுகின்ற விஷயமொன்றையே நோக்கிக் களிக்கின்றது உலகம்.

இந்த க்ரந்தங்களிலெல்லாம் கண்செலுத்தி மனத்தையூன்றவைத்து நம்முடைய நிரூபணங்களை நன்கு க்ரஹிக்கச் சக்தியற்றவர்களான ஸுகுமாரமதிகளும் எளிதில் க்ரஹிக்கும்படியாக அடியேன் இங்குத் தெரிவிப்பதொன்றையே யாவருங் குறிக்கொள்க. மணவாளமாமுனிகளின் அமுத மொழியான உபதேசரத்தினமாலையை அறியாதாரில்லையே. பலர்க்கும் கண்டபாடமாகவுண்டே. இவ் வொருநூலே போதும் ப்ரக்ருத விவாதத்தில் உண்மையுணர. சொல்லுகேன் கேண்மின். இவ்வுப தேச ரத்தினமாலையில் ஆழ்வார்கள் அனைவரும் ஆசார்யர்களில் சிலரும் ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ளார்கள். ஆழ்வார்கள் நிற்க. ஆசாரியர்களைப்பற்றி அருளிச்செய்து வருகையில் ஒரு ஆசார்யரைப்பற்றியே பல முறை ப்ரஸ்தாவிக்க நேருமிடங்களில் இரண்டு வகையான ப்ரணாளியைக் காண்கிறோம். (1) திரு நாமத்தை ஒருதடவை சொன்னாப்போலே மறுதடவையும் சொல்லாமல் ஒவ்வொரு தடவையில் ஒவ்

வொருவிதமாகச் சொல்லுவது ஒரு ப்ரணாளி. (2) எல்லாத் தடவைகளிலும் சிறிதும் மாறுபாடில்லாமல் ஒரேவிதமாகவே சொல்லுவது மற்றொரு ப்ரணாளி.

முதல் ப்ரணாளியில் சேர்ந்த திருநாமங்களை விவரிக்கிறேன். உடையவரை ஓரிடத்தில் எதிராசரென்றும் மற்றோரிடத்தில் எம்பெருமானாரென்றும் கூறுகிறார். திருக்குருகைப்பிரான்பிள்ளானை ஓரிடத்தில் பிள்ளானென்றும் மற்றோரிடத்தில் திருக்குருகைப்பிரான்பிள்ளானென்று முரைக்கிறார். பிள்ளை லோகாசார்யரை ஓரிடத்தில் உலகாசிரியனென்றும் மற்றோரிடத்தில் வையகுருவென்றும் ஸாதிக்கிறார். வாதிகேஸரி ஜீயரை மணவாளயோகியென்றும், அழகிய மணவாளச்சீயரென்றும், மணவாளமுனியென்றும் மூவகையாக மொழிகின்றார். (2) இனி இரண்டாவது ப்ரணாளியிற்சேர்ந்த திருநாமங்களைக் கேண்மின். நஞ்சீயர், பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை—ஆகிய இம்மூன்று திருநாமங்கள் (உபதேசரத்தினமாலையில்) அடிக்கடி பேசப்பட்டுள்ளன, எத்தனைதடவை பேசினாலும் ஒரேவிதமே தானுள்ளது. இங்குத்தான் விவேகிகள் விமர்சசக்தியைச் செலுத்தவேணும். நஞ்சீயரை ஒரு தடவை நஞ்சீயரென்று சொல்லி மற்றொருதடவை வேறுவிதமாகச் சொல்லவேணுமானால் சீயர் என்று சொல்லலாம்; அப்படிச் சொன்னால் அந்த ப்ரகரணத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட மற்றொரு சீயராகிய அழகிய மணவாளச் சீயரையும் சிலர் க்ரஹிக்க நேருமாதலால் அப்படி மருளவைப்பது கூடாதென்றே மாமுனிகள் மூவிடங்களிலும் நஞ்சீயரென்றே மொழிந்தார். இப்படி, வடக்குத் திருவீதிப்பிள்ளையை ஒருதடவை வடக்குத் திருவீதிப்பிள்ளையென்று சொல்லி மற்றொருதடவை வேறுவிதமாகச் சொல்லவேணுமானால் திருவீதிப்பிள்ளையென்று சொல்லலாம். அப்படிச் சொன்னால் இவரோடு ஸப்ரஹ்மசாரியான நடுவில் திருவீதிப்பிள்ளையைச் சிலர் க்ரஹிக்க நேருமேயென்றெண்ணி அப்படி மருளவைப்பது கூடாதென்றே சோம்பாமல் நான்குதடவைகளிலும் வடக்குத் திருவீதிப்பிள்ளையென்றே வகுத்தருளினர்.

இப்படி, பெரியவாச்சான்பிள்ளையை ஒருதடவை பெயவாச்சான்பிள்ளையென்று சொல்லி மற்றைத்தடவைகளில் வேறுவிதமாகச் சொல்லவேணுமானால் ஆச்சான்பிள்ளை யென்று எளிதாகச் சொல்லலாம்; அப்படித்தான் சொல்லியிருக்கவும் வேண்டும். அப்படிச் சொன்னால் ஆச்சான்பிள்ளை யென்றே ப்ரஸித்திபெற்ற [ப்ராக்ருதவிவாத க்ரஸ்த] ஆசார்யரை க்ரஹிக்க நேர்ந்துவிடுமேயென்றெண்ணி அப்படிமருளவைப்பது கூடாதென்கிற திருவுள்ளத்தினாலேயே பெரிவாச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையென்றே சோம்பாது பொறித்துள்ளார். இப்படியிருக்கவும், பெரியவாச்சான்பிள்ளை யென்றாலும் ஆச்சான்பிள்ளையென்றாலும் ஒருவ்யக்தியேதான் விவக்ஷிதர் என்று சிலர் சொல்லத்தலைப்பட்டால் இதனையுகப்பார் மாமுனிகளின் திவ்யஸூக்தியமுதக்கடலில் அவகாஹனமுடையராக இருக்கமுடியுமா வென்பதை அறிஞரேயறிவர்.

ஒவ்வொருதடவையிலும் பெரியவாச்சான்பிள்ளை யென்றே ஸாதித்தருளினதன் காரணத்தை இவ்வளவு ஆராய்ச்சியுடன் அடியேன் தெரிவித்திருக்கிறேன். இதற்குப் பிறர் ஸஹ்ருதயஹ்ருதயங்கமமாகத் தம்முடைய ஆராய்ச்சியைக் காட்டலாமே. மற்றவிஷயங்களெல்லாவற்றையும் விட்டு இவ்விஷயமொன்றிலேயே ஆராய்ச்சியைச் செலுத்தட்டுமே. உபதேசரத்தினமாலையில் செய்யுளில் இப்படியருளிச் செய்தவர் ரஹஸ்யவ்யாக்யானங்களில் ஆதியிலிருந்தே ஆச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளை யென்றே எழுதிவரக் காரணமென்ன? என்பதையும் ஆராய்ந்தெழுதட்டும். விஷயம் ஒரு அத்யாயம் எழுதிவிட்டுப் பிறகு வசவு ஒன்பதத்யாயம் எழுதட்டும்.

இப்படி அபூர்வமான விஷயங்களை அடியேன் புதிது புதிதாக எடுத்துக் காட்டவல்லேன். அத்தனையும் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தே காட்டுகிறேனேயன்றி வேறொருவருடைய வாக்கிலும் வாய்வைப்பது கிடையாது. பிறர் இப்படி ஒரு விஷயமாவது எடுத்துக்காட்டி யிருப்பதுண்டோ? "அஷ்டாத்யாயியில் 38-வது பாராவில் பொய் சொன்னார், பெரும்பொய் சொன்னார்" என்று இதுதான் 308 தடவை எழுதப்பட்டுள்ளது. இதைப்பற்றி வித்யார்த்தி ஆச்சான்பிள்ளையாறரஹஸ்யத்தில் 42 முதல் 49 வரையிலுள்ள பாராக்களில் விரிவாகத் தெரிவித்திருப்பதை உலகம் காணும். மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திகள் தவிர வேறு ஒருவருடைய உக்தியையும் இவ்விஷயத்தில் தஞ்சமாகக் கொள்ளேனென்று அஷ்டாத்யாயியில் 57, 58 பாராக்களில் கல்வெட்டாக எழுதியிருப்பவனடியேன். அதற்குமாறாகக் கனவிலும் நடந்துகொள்ளநேராது. மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் ஒன்றேயொன்றாவது காட்டமுடியுமோ பிறர்க்கு? அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் ஒருவரும் தொட்டறியாத பரகாலநல்லான் ரஹஸ்யம்போன்ற புத்தகங்களில் பிறர் எடுத்துக்காட்டுவது சிறிதும் பயனற்றது. அப்புத்தகங்களின் பெயரும் பிறர்க்குத் தெரியாதிருந்தது. அஷ்டாத்யாயியில் நாமேயெடுத்துக்காட்டியிருக்கிறோம். அந்த மருள்மிகுமொழிகளைத் தள்ளுங்கோளென்று நாம் 57, 58 பாராக்களில் ஸ்பஷ்டமாக எழுதியிருக்கவும் 38—38 என்றே த்யானம் செய்வார்க்கு நல்லவேளையாக ஆச்சான்பிள்ளையாறு

ரஹஸ்யத்தில் 38-வது பாரா வெகு அற்புதமாக அமைந்துளது. இனி அந்த முப்பத்தெட்டை விட்டு இந்த முப்பத்தெட்டையே உலகம் மனனம் பண்ணவடுக்கும். இதை அதில் 14-வது பக்கத்தில் கண்டு களிக்க. அங்குள்ள முக்கியமான விஷயத்தை இங்கு யெடுத்துக்காட்டுகேன் :—" ஸ்ரீமத் திருப்பதி சின்ன ஜீயர்ஸ்வாமி முதலான மத்யஸ்த மஹநீயர்கள் உண்மையை உள்ளபடி நிரூபித்துத் தெரிவித்த அபிப்ராயத்தில் குறை கூறப் பிறர்க்கு என்ன அதிகாரம் ? 'ஸகலமஹான்களும் இப்படி ஏககண்டமாக அபிப்ராயப்படுகிறபடியால் அதற்குமாறுன அடியேனபிப்ராயத்தைத் திருத்திக்கொண்டேன்' என்று ப்ரசுரஞ் செய்வதோ, அதற்கு லஜ்ஜையாயிருந்தால் வாளாவிடப்பதோ, அல்லது அந்த வித்வான்களுக்கு மேற்பட்ட ஸம்ப்ரதித்த வித்வான்களைக்கொண்டு தம்முடைய கொள்கையை நிலைநிறுத்தப்பார்ப்பதோ, அதவா அந்த வித்வான்களையே அடிபணிந்து 'இதைவிமர்சிக்கவேணும், இதைப்பராமர்சிக்கவேணும்' என்று விநயமுடன் வேண்டிக்கொள்வதோ இவற்றிலொன்று செய்திருக்கவேண்டுவதன்றோ யோக்யமான செயல். அதைவிட்டு உலகை யெல்லாம் நிந்திப்பதென்று பிறர் நிகைகொண்டவிதனல் என்னுகும் ?—என்பதே அங்குள்ளது.

சென்ற ஆனிமாதம் வெளிவந்த ஸுதர்சநபத்திரிகையில் சிலருடையஅபிப்ராயபத்ரிகைகள் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவை காசுக்கு முதவாதவையென்பவையும் அத்தனையும் க்ருத்ரிமம் என்பதையும் (இத்துடன் வெளிவருகிற) மாமுனிவனருள்வெற்றி நூலின் பிற்பகுதியில் மிகவிரிவாக நிரூபித்திருக்கிறேன். இங்கும் சுருக்கமாக நிரூபிக்கிறேன். பம்பாய்நகரத்தில் வாழும் ஸ்ரீஉவே. V. V. ஐயங்கார் ஸ்வாமி 14—5—49ல் பிறர்க்கு ஸ்ரீமுகமருளியதாக வெளியிடப்பட்டிருக்கிறது. அந்த வேடிக்கையை என்னவென்று சொல்லுவோம். பிறருடைய க்ஷோடசாத்யாயியானது 25-5-49ல் தான் வெளிவந்துள்ளது. அதற்குப்பதினொருநாள் முன்னமே அவர்க்ஷோடசாத்யாயியைப்பார்த்து பழைய அபிப்ராயத்தை மாற்றிக்கொண்டதாக எழுதுவது அஸம்பாவிதம். க்ஷோடசாத்யாயி வெளிவந்த பிறகு அதைப்பார்த்து என் அபிப்ராயத்தை மாற்றிக்கொள்ளுகிறேன் என்று கருத்தாகில் இதுவொரு தாக்ஷிண்யத்தினலோ நிர்ப்பந்தத்திற்காகவோ எழுதியதாயிருக்க வேண்டுமத்தனை. க்ஷோடசாத்யாயிவெளிவந்த பிறகு (மே மாதமுடிவுதேதியில்) இந்தஸ்வாமி பாம்பேநகரத்திலிருந்து நேராகக் காஞ்சீபுரத்திற்கெழுந்தருளி அடியேனுடைய க்ருஹத்திலேயே ஸகுடும்பமாக எழுந்தருளியிருந்து அப்போது அங்கு ஸாதித்த வார்த்தைகளை நமது கார்யதர்சி நமக்கு [பஞ்சவடிக்கு] எழுதியிருக்கிறார். அதை இப்போது நாம்வெளியிடுவது அவ்வளவு உசிதமன்று. அந்தஸ்வாமி மஹா ப்ராமாணிகர். தம்மிடத்தில் ஒருவர்க்கும் விரோதபாவனை விளையக் கூடாதென்கிற சாந்தகுணமுள்ளவர். அதைத்தான் அவருடைய ஸ்ரீமுகத்தில் தெரிவித்திருக்கிறார். புத்தூரில்வந்து பரந்த ரஹஸ்யத்தைப் பெற்று வாசித்தபோது அவர்நெஞ்சில் என்னபட்டதோ அது அப்படியே வெளிவந்துவிட்டது. அதைத்தான் உலகம் காண விரும்பும். (மற்றது பிறகு.)

ஸ்ரீ. உ. வே. மநீஷிமார்ய. ராவ்பஹதூர். வக்கீல் (மதுரை) R. நரஸிம்மய்யங்கார் ஸ்வாமிக்கு அபேக்ஷையில்லாமலே க்ஷோடசாத்யாயி கிடைத்ததாம். ஒரு வக்கீலுக்கு ஒருவக்கீல் புத்தகமனுப்பினல் மரியாதையோடு வரவேற்பு காட்டவேண்டியது முறையல்லவா ? அதைக்காட்டி அப்பெரியார் எழுதியிருந்த கடிதத்தைப் பிறர் தமக்கு அனுகூலமாக வெளியிட்டுக்கொள்வது விந்தையே. அந்த ஸ்வாமி 28-5-49ல் பிறர்க்கு எழுதிய கடிதத்தில் " இந்தவாதம் மிகவும் துக்ககரமானது ; நீங்கள் பதிப்பித்த எட்டு ரஹஸ்யங்களை வி. பி. மூலமாக உடனே அனுப்பவும் " என்றிருப்பதாகப் பிறரால் வெளியிடப்பட்டுள்ளது. இது உண்மையே. V. P. மூலம் புத்தகத்தை வரவழைத்துப் பார்த்தபின்பு அந்தஸ்வாமி 2-6-49ல் ஸ்ரீராமாநுஜன் பத்திரிகை நிர்வாஹ ஆசிரியர்க்கு எழுதியிருந்த ஸ்ரீமுகம் உலகறிய வெளிவந்துளதே :

" அவர் வெளியிட்ட பரந்த ரஹஸ்யத்தை V. P. மூலமாகத் தருவித்துப் படித்தேன். இரண்டு முகவுரைகளையும் 44-ம் பக்கம் குறிப்பையும் கவனித்தேன். இவைகளைப் பார்க்கவே அப்புத்தகம் தருவிக்கப்பட்டது. 'கி. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்களால் பரிசோதிக்கப்பட்டு' என்று கண்டிருப்பதில் ஸ்ரீஸ்வாமியின் ஸம்பந்தத்தை அடியோடு விலக்கியது மிகவும் தப்பு. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் பதிப்பாசிரியர் என்ற ஸ்தானத்தில் மாத்திரமே நின்றிருக்க வேண்டும். அவர் அதிகப்படியான கியாதிகளுக்கு ஆசைப்பட்டு மிகவும் அநாவச்யமாக பாகவதாபசாரத்தில் தலைநின்றுவிட்டார். இதைத் தெரிவிப்பதற்காக எனக்கும் வேண்டிய ஸம்பாவனைகள் செய்யவே போகிறார். அதற்காக நான் சிரமப்படமாட்டேன். உண்மையை உலகுக்குத் தெரிவிக்கவேண்டியது என்போல்வாருடைய கடமை" என்றும் மேலும் பலவிஷயங்களும் அவர் எழுதியிருப்பது உலகமெங்கும் பரவியுள்ளது.

அந்த ஸ்ரீமுகத்திற்குப் பிறகு அவர் அடியேனுக்கு நேரில் எழுதியுள்ள ஸ்ரீமுகங்கள் 7. இதேஸமயத்தில் ஹ்ருஷீகேசத்திலும் அவருடைய ஸ்ரீமுகமொன்று கிடைத்திருக்கிறது. இதிலுள்ள வாசகம் "கூனியையும் கைகேயியையும் முதலில் வைதவர்களே பிறகு லோகக்ஷேமங்கண்டு மிகவும் வாழ்த்த நேர்ந்ததுபோல, ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியையும் ஆச்சான்பிள்ளையாரரஹஸ்யத்தையும் ஸேவிக்கப் பெற்றபின்பு அந்த புத்தூர் வக்கீலையே உலகம் புகழுமென்பதில் ஸந்தேஹமில்லை." என்பதாம். இந்த தாத்பர்யத்திலேயே அடியேனுக்கு இதுவரை கிடைத்திருக்கிற ஸ்ரீமுகங்கள் பலபல. அவை ஸாமான்ய மனிதர்கள் எழுதியவையல்ல. எல்லாம் க்ரமேண வெளியாகி வைணவவுலகை மகிழ்விக்கும்.

ஸத்யமே ஜயந்தருமென்று, தாம்பெரிய ஸத்யவாதிபோல் எழுதுகின்ற பிறர் தமது 19 செ. பத்ரிகையில் "ஆசார்ய ஸ்வாமி நேமிநாத் மஹாராஜ்" அவர்களினின் ஸ்ரீமுகம் என்று முழுப்பொய்யான கடிதமொன்று வெளியிட்டிருக்கிறார்கள். அதைப்பற்றி உலகமறிந்த ப்ராமாணிகரொருவருடைய ஸ்ரீமுகமொன்று இத்துடன் வெளிவருகிறது. மாமுனிவனருள்வெற்றியில் நாமும் மிகவிரிவாக எழுதியிருக்கின்றோம். மற்ற விசாரங்களெல்லாவற்றையும் விட்டு இந்த விசாரமொன்றேதான் இங்கு முக்கியமாகக் கொள்ளப்பட்டது. ஆங்காங்கு உழன்று ச்ரமஜீவனம் செய்துவருகின்ற வீடுவாசலற்றவொரு நபரை இவர் மஹாராஜ் என்று பெயரிட்டு, அவர் நைமிசாரணியத்தில் ஸ்ரீரங்கம் கோயிலைப் போன்ற பெரியகோயில்கட்டி வருகிறாரென்றும், அவர்க்கு லக்ஷக்கணக்கான சிஷ்யர்களிருக்கிறார்களென்றும், அவர் பெரிய ஜமீந்தாரியென்றும் எழுதிவிட்டுத் தாம் வைவது போதாமல் அவர்வாயைக் கொண்டும் வசவுகளை வெளியிட்டுவைக்கிறார். வசவுகளைப்பற்றி நமக்குக் கவலையேயில்லையென்று புன்முறையும் தெரிவிப்போம். இவர்க்கு அஸத்யம்தவிர வேறு தெரியாதென்பதை இவ்வொரு விஷயங்கொண்டே உலகமுணரப் போகிறது; உணர்ந்துமிருக்கிறது. "மேலேகுறித்த விஷயத்தில் ஏகதேசமாவது ஸத்யமென்று தேறிவிட்டால் இனி நான் என்வாழ்நாள் முழுவதும் பேனாவைக் கையால் தொடுவதில்லை, எங்கும் வாயைத் திறப்பதுமில்லை" என்று சபதம்செய்தே இது தெரிவிக்கின்றேன்.—

29-7-49ல் அடியேன் ஸபரிவாரனாய் நைமிசாரணியம்வந்து சேரப்போகிறேன். (20-7-49வரை ஸ்ரீபதரிகாச்ரமத்திலிருந்துவிட்டு 28௳க்குள் ஹரித்வாரம் சேர்ந்து 29௳ நைமிசாரணியம் சேருகிறேன்.) 'நேமிநாத் மஹாராஜ்' அந்த நைமிசாரணியத்தில் ஸ்ரீரங்கம் கோயிலைப்போன்ற கோயில் கட்டியிருக்கிறாரே, அதை அங்கு நேரில்வந்து காட்டுகிறவர்களுக்கு முதல்வகுப்பு ரயில்சார்ஜும் ச்ரமபரிஹார ஸத்காரமாக 100-ரூபாயும் கொடுக்கக் கடமைப்பட்டிக்கிறேன். ஷை பணத்தை முன்னடியாக ஸ்ரீ. உ. வே. V. V. ஐயங்கார்ஸ்வாமி C/o Ms. Grindlay & Co., Post Box No. 93. Bombay விலாஸத்திற்கு அனுப்பிவிடவும் தடையில்லை. திருச்சினாப்பள்ளிக்கே அனுப்பிவிடவேணுமென்றாலும் அனுப்பத் தடைகிடையாது, அடியேனுக்கு எங்கிருந்து கடிதமெழுதினாலும் ஆகாச விமானமூலமாக 4-நாளில் கிடைத்துவிடும். 16-7-49வரை அடியேனுக்கு விலாஸம்— P. B. Annangaracharya C/o Postmaster, Badrinath (Garhwal Pouri) இவ்வளவே. ஆச்சான்பிள்ளை விஷயமான சர்ச்சை இவ்வளவோடு முடிவுபெறவேண்டியது. ஸத்யம் ஜயிக்குமழகை உலகம் காண்பதற்கு எம்பெருமான் விரைவிலேயே அவகாசமளித்தருளினன். திருக்கோட்டியூரிலிருந்து ஸ்ரீ தங்கமய்யங்கார் (1-7-49௳) எழுதியுள்ள ஸ்ரீமுகமும், பம்பாயிலிருந்து ஸ்ரீ வி. வி. ஐயங்கார் (2-7-49௳) எழுதிய ஸ்ரீமுகமும் உண்மையை உள்ளபடி அறியும்படிச் செய்துள்ளன.

பிறர் வெளியிட்டிருக்கிற ஸ்ரீமுகங்களெல்லாம் இவ்வளவு ஸத்யம் பொலிந்தவையேயென்பதை அடுத்த வெளியீட்டில் காணலாம். "அட்டசூலா: ஜநபதா: ... பட்டணேஸ்மிந் ப்ரதிஷ்டிதா:" என்று விச்வகுணதர்ச சம்புவில் மங்களாசாஸனம்பெற்ற மஹான்களே பிறர்க்கு ஸ்ரீமுகமளிக்க முன்வருவரென்பது ஆங்காங்குள்ள மஹநீயர்களால் உலகுக்கு வெளிச்சமாகும்.

ஹ்ருஷீகேசம். 5-7-49.

---

ஸ்ரீ:

## ஸத்யம் ஜயிக்குமழகைக் காண்க.

காஞ்சீபுரத்தில் பிறந்த C. P. ராஜகோபாலாசாரியென்பவர் பலவிடங்களில் உத்யோகங்களையிழந்து நேமிநாத் மஹாராஜ் என்று மாறுபெயர்பூண்டு எங்கும் பொய்யுரைகளைப் பேசிக்கொண்டும் தற்காலம் உருவையேகாட்டிக்கொள்ள முடியாமல் மாறு வேஷத்துடன் மறைமுகமாக ஸஞ்சரித்தும் வருகிறார். இவர் நைமிசாரண்ய மிருக்குமிடங்கூட அறியாதவர். நான் பதரிகாச்ரமத்திற்கு 32 தடவை போய் வந்திருக்கிறேன். ஒவ்வொரு தடவையிலும் நைமிசாரண்யமும் போயிருக்கிறேன்.

கடைசியாகசென்ற வருஷத்தில் போய் வந்திருக்கிறேன். அவ்விடத்தில் ஹரிப்ரபந்நாசாரி யென்கிற உத்தராதி வைஷ்ணவர் ஸ்ரீவானமாமலைஸ்வாமி நியமனத்தினால் கட்டியிருக்கிற கோயில் பதினான்கு வருஷமாக வுள்ளது. இதுதவிர வேறு ஓரிடமும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கிடையாது. இந்த C. P. ராஜகோபாலாசாரி யென்பவர்க்கு அவ்விடத்தில் ஸ்தானமிருப்பதாகச் சொல்வதும் ஸ்ரீரங்கம் ரங்கநாதன் கோவிலைப்போன்றவிடம் அது என்று ஒருவக்கீல் எழுதுவதும் வெகு ஆச்சரியமா யிருக்கிறது.

ஸ்ரீநேமிநாத் மஹாராஜ் என்பவர் காஞ்சீபுரத்து C. P. ராஜகோபாலாசாரியாரல்லர் என்றும் வேறு நபர் என்றும் சொன்னாலுங்கூட, நைமிசாரணியத்தில் ஹரிப்ரபந்நாசாரியென்பவருடைய கோவிலொன்றுதவிர வேறு எந்த ஸ்தானமுங்கிடையாது. வெகு சிறிய கோயிலும் அங்கே கட்ட ஆரம்பிக்கப்பட்டிருக்கவுமில்லை. ஒவ்வொருவரும் நேரில்கண்டு அறியக்கூடிய இவ்விஷயத்திற்கு நான் அதிகமாக எழுதவேணுமோ?

**2—7—49.** P. ப்ருந்தாவனம் **சீரங்காச்சாரி.**

---

**A. Ramanujachari**

A. 23/177 Lodi Colony,
NEW DELHI, 28—6—49.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீ புத்தூர் கி. ஸ்ரீனிவாசய்யங்கார் ஸ்வாமி சன்னிதியில் அடியேன் ராமாநுஜன் தண்டம் சமர்ப்பித்து எழுதுவது: தேவர் அனுப்பிய ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் கிடைக்கப்பெற்றேன். "நன்றாய் படித்துப்பார்த்து அபிப்ராயத்தைத் தெரிவிக்கவேண்டும்" என்ற தேவர்கட்டளைக்கிணங்க இதை எழுத முன்வந்துள்ளேன். இங்கு டில்லியில் சம்பிரதாய விஷயங்கள் நன்குதெரிந்தவர்களான ஸ்ரீ C. S. பார்த்தசாரதி அய்யங்கார், B.A. B.L., முதலிய மஹான்களையணுகி, அவர்கள் அபிப்ராயத்தையும் கேட்டேன். பொதுவாக யாவரும் நம் தென்னாசார்ய சம்பிரதாயஸ்தர்களிடையே இப்படி விரும்பத்தகாதவிதமாய் சர்ச்சை நடக்கிறதைக் கண்டு வருத்தப்படுகின்றனர்.

2. வெகு புராதனமான ஒரு க்ரந்தத்தின் காலநிர்ணயம், ஆக்கியோன் பெயர்போன்ற ஆராய்ச்சிகளில் அபிப்ராயபேதத்திற்கு இடமுண்டு. இதை மறக்கக்கூடாது. ஒருவருடைய ஆராய்ச்சி முடிவை, மாறுபட்ட அபிப்ராயங்கொண்ட மற்றவர்கள் தக்க அத்தாட்சிகளைக்கொண்டு கண்டிக்கலாம்; ஆனால் ஆராய்ச்சியாளரை "பொய்பேசுபவர்", "பொறாமை கோஷ்டிக்குத் தலைமைவஹிக்கிறவர்", "பாஹிம்ஸையையே தேஹயாத்ரையாகக்கொண்ட ராக்ஷஸர்" என்றெல்லாம் நிந்திப்பதும், இவ்வசைமொழிகளைக்கொண்டே ஆராய்ச்சிமுடிவு தப்பு என்று சொல்லப்புகுவதும் முறையல்ல. மேனாட்டுக்கல்வி பயின்ற தேவருக்குத்தெரியாதது அல்ல.

3. பண்டைநாட்களாகக் கையாண்ட ஒரு அபிப்ராயம், 'பழையது' என்பதற்காகவே உகந்ததாகவோ, ஏற்றமுள்ளதாகவோ ஆகிவிடவேண்டிய நியமமில்லை. ஒருவர் ஆராய்ச்சிசெய்து அதன் பலனாய் ஒரு குறையைத் தெரிவித்தால், உடனே அவரை "பரமாசாரியர்கள் விஷயங்களில் தூஷணை செய்துவிட்டார்", "இவர் படிப்பது ராமாயணம், இடிப்பது பெருமாள்கோயில்", "ஆக்ரஹத்தினால் இம்மாதிரி துர்ப்பலங்களும், நிஷ்பிரயோஜனங்களுமான வாதங்களில் இறங்குகிறார்" என்றெல்லாம் தூற்றுவது நியாயவாதத்திற்கு முரணானதென்று சொல்லவும் வேண்டுமோ?

4. மேலும், கீழ்கண்ட அவதூறுகளை தேவரீர் எழுதியிருக்கிறீர். (இங்கு தேவர் சாதித்துள்ளதைச் சுருக்கிக் கூறுகிறேன்):—

(1) P. B. A. ஸ்வாமி ஸ்தாபித்திருக்கும் நம்பிள்ளைசன்னிதியில் வலது பக்கமிருப்பவர் வடக்குத் திருவீதிப்பிள்ளை. இடதுபக்கமிருப்பவர் பெரியவாச்சான்பிள்ளை. இது க்ரம விருத்தம்.

(2) "ஜகன் மோஹினி" பொங்கல் மலரை P. B. A. ஸ்வாமி விமர்சனம் செய்யப் புகுந்தது நம் ஆசாரியர்கள் விஷயத்தில் அபசாரப்பட்டதாகும்.

(3) நான் 'ரஹஸ்யவிவேகம்' என்ற புத்தகம் கேட்டேன். P. B. A. ஸ்வாமி கொடுக்க மறுத்து விட்டார். காரணம் என்ன தெரியுமா? தான்பேசியிருக்கும் பொய்யெல்லாம் அம்பலத்திற்கு வந்துவிடுமென்ற பயம்!

(4) 'பரந்தாரஹஸ்யம்' எழுதியவர்யார் என்ற விஷயத்தில் தன் அபிப்ராயத்தை மாற்றிக் கொண்டுவிட்டார் நம் P. B. A. ஸ்வாமி. இதன் மர்மந்தான் என்ன? அடியேன் P. B. A. ஸ்வாமிக்கு அவர் கேட்டபிரகாரம் 300 பிரதிகளை ரூ. 65-க்கு கொடுக்க மறுத்தது! இப்படி பல.

இப்போது நாம் ஆராயவேண்டிய விஷயத்திற்கும் மேலே தேவர்கண்டிருக்கும் குற்றச் சாட்டுகளுக்கும் ஸ்னனப்ராப்தி கூட இல்லையே. அக்குற்றச்சாட்டுகளை உண்மையென்று வைத்துக் கொண்டாலும், உமது கட்சியைப் பலப்படுத்தும் எடுத்துக்காட்டுகளாக அவைகளை எப்படிக் கொள்ளமுடியும்? அப்படி செய்வது அவிவேகமன்றோ?

5. ஆகக்கூடி—

(1) மொத்தம் 16 அத்யாயங்களில் சுமார் முதல் ஆறு அத்யாயங்களால், உமக்கு உண்மை போன்று புலப்பட்ட P. B. A. ஸ்வாமியின் குணதோஷங்களை வர்ணித்திருப்பதை தவிர்த்திருக்கலாம். வாதத்திற்கும் இவைகளுக்கும் சம்பந்தமேயில்லை.

(2) எல்லா அத்யாயங்களிலுமே வசைமொழி போன்ற விரும்பத்தகாதவைகளை ஒதுக்கி விட்டு, தேவர் எடுத்துக்கொண்ட விஷயத்தில் மாத்திரம் கவனத்தைச்செலுத்தியிருந்தால் அழகாயிருந்திருக்கும்.

(3) தேவர், உமது கட்சியைத் தக்க காரணங்களைக் கொண்டு, யாவருக்கும் மனக்கசப்பிற்கு ஹேதுவில்லாமலும், எதிர்கட்சியாருங்கூட 'வெகு அழகு' 'வெகு அழகு' என்று புகழும்படி எழுதியிருக்கலாம்.

(4) இவைகளைத்தவிர க்ரந்தவிஷயமாக உமது கொள்கையை நிலைநிறுத்தும்வண்ணம் காரணங்கள் ஒன்றுமே சொல்லாதது வருந்தத்தக்கது.

தேவரீர் **Argumentum ad hominem** என்னும் வாதத்தில் தேர்ச்சி பெற்றவர் போலும்!

இப்படிக்கு
**ராமானுஜன்.**

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

க்ஷேமம்.

சிகந்திராபாத்
**லக்ஷ்மீநாராயணன் ஸந்நிதி.**
**17—6—49**

ஸ்ரீமதித்யாதிப்படி எழுந்தருளியிருக்கும் அட்வகேட் புத்தூர் ஸ்ரீனிவாஸ அய்யங்கார் ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் அதிகாரி வானமாமலை தெ. ஸ்ரீனிவாஸன் தெண்டம் சமர்ப்பித்த விண்ணப்பம்:—

தேவரீர் அடியேனுக்கு அனுப்பின ஷோடசாத்யாயியை ஸேவித்தேன். ஸ்ரீ. உ. வே. ஜகதாசார்ய ஸிம்மாஸநாதிபதி ப்ர. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி ஸாதித்த அஷ்டாத்யாயியை முன்னமே ஸேவித்தேன். இரண்டுபுஸ்தகங்களையும் பக்ஷபாதமில்லாமல் இவ்விடம்உள்ள தென்னாசார்ய சம்பிரதாயஸ்தர்களான ஸ்வாமிகளின் கோஷ்டியில் ஸேவித்ததில் எல்லாரும் ஏகமனதாய் அபிப்பிராயப்பட்ட விஷயம் பின்வருமாறு—பரிசீலனைபண்ணி விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

இந்த அடியேனுடைய அபிப்ராயத்தை தேவரீருடைய பத்திரிகையில் வெளியிடப் பிரார்த்திக்கிறேன்.

ஆனால் தேவரீருக்கு ஸாதகமானால்தான் வெளியிடுவது, பாதகமானால் தள்ளிவிடுவது என்று திருவுள்ளம்பற்றக்கூடும். அது யுக்தமாகுமோ என்று தேவரீரே ஆலோசித்து அடியேனுக்கு பதில் ஸாதிக்கவேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

தேவரீரின் ஷோடசாத்யாயியில் பாகவதாபசாரத்தின் கொடுமையை தேவரீரே விஸ்தாரமாய் ஸாதித்திருந்தும் தேவர் வேணுமென்றே பாகவதாபசாரப்படுவது மிகவும் வியக்கத்தக்கதாயிருக்கிறது. கண்ணைத்திறந்துகொண்டே கிணற்றில் விழுபவர்களை எப்படித்தடுப்பது. நிஜமாகவே தூங்குபவர்களை உணர்த்தலாமே தவிர உறக்கமில்லாமல் கண்ணைமூடிக்கொண்டு பொய்த்தூக்கம் போடுபவர்களை எழுப்புவது முடியுமோ? உலகில் பாகவத பரதந்த்ரர்களான ஸ்ரீவைஷ்ணவர்களிடம் அபசாரப்படுவதே மிகவும் க்ரூரம்; அதிலும் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதியாயும் தென்னாசார்ய ஸம்பிரதாய துரந்தரராயும் ஏழாட்காலும் பழிப்பிலாத வம்சஸ்தராயும் எள்ளியிருக்கும் ஸ்ரீ. உ. வே. ப்ர — அண்ணங்கராசார்ய ஸ்வாமியை நோக்கிப் பலவிதமாகவும் கடுமையாகவும் உள்ள நிந்தைச்சொற்களை வாரியிறைக்க தேவரீருக்கு எம்பெருமான் எப்படி புத்திப்ரதாநம் பண்ணினான் என்று எவ்வளவு ஆலோசித்தும் கோசரமாகவில்லை. ஸர்வாந்தர்யாமியான ஸர்வேச்வரனும் தேவரீரின் கடுஞ்சொற்களை அஸ்தாநேகேட்டு தேவர் ஹ்ருதயத்தில் என்ன பாடுபட்டிருப்பனோ.

பூஜ்யராயும் ஸர்வஜன ஸுஹ்ருத்தாயும் எள்ளியிருக்கும் ப்ர. அ. ஸ்வாமியிடம் தேவர் அபசாரப்பட்டிருப்பது மிகவும் கொடுமை. இப்படி அஸ்தாநே தூஷிப்பதினால் என்ன ஆய்விடும்? ஆச்சான்பிள்ளையின் அஷ்டாத்யாயியில் தேவரீரைப்பற்றி ஒரு தூஷணையாவது இருக்கிறதோ? அப்படி இருந்தால் "க்ருதேச ப்ரதிகர்த்தவ்யம்" என்று தேவரீர் நிந்திக்க நியாயமுண்டு. இப்படி அநாவச்யமாக நிந்திப்பது நம் ஸம்ப்ரதாயத்தின் மேன்மைக்கு மிகவும் குறைவு என்பதை அடியேன் தேவரீருக்கு எழுதவேணுமோ? தேவர் எழுதிய தூஷண அத்யாயங்கள் ஷோடசமல்ல; சதஸஹஸ்ரம் எழுதினாலும் அதற்குத்தகுந்த சமாதானங்கள் பசுமரத்தில் அடித்த ஆணிபோல் அசைக்கமுடியாதபடி அதிசீக்கிரமாகவே வெளிவரும் என்று தேவரீருக்குத் தெரியாததோ. மேலும் அடியேன் ஸ்வயம் வ்யக்தமான வானமாமலையிலே ஜனித்து வானமாமலை ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்ன சடகோப ராமாநுஜன்ஸ்வாமி திருவடிகளிலே ஆச்ரயித்து ஆசார்ய கைங்கர்யத்திலும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளினாலேயுமே பொழுதைப் போக்கியும் விசேஷமாய் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி சின்னகலியன் வானமாமலை ராமாநுஜஜீயர் ஸ்வாமியுடனேயே மூன்றுயாத்திரைகளிலும் அந்வயித்து ஸம்பிரதாய க்ரந்தங்களின் தத்வங்களை அநவரதம்கேட்டும் இருக்கிறேன். காலக்ஷேபகோஷ்டியில் ஆச்சான்பிள்ளையின் திருநாமம் வருகிறகட்டங்களில் பெரியவாச்சான்பிள்ளையின்குமாரர் நாயனாராச்சான்பிள்ளை என்றே ஸாதிக்கக் கேட்டதுண்டு. தவிரவும் தத்வத்ரய வ்யாக்யானத்தில் மணவாளமாமுனிகள் ஒரேயிடத்தில் ஆச்சான்பிள்ளை என்றும் பெரியவாச்சான்பிள்ளை என்றும் சப்தபேதேந ஸாதித்திருப்பது ஒரு வ்யக்தியைப் பற்றியே என்று தேவரீர் பிடிவாதமாக எழுதியிருப்பதை இதுவரை எங்கும் கேட்டதில்லை. அது அந்வயிக்கவும்மாட்டாது. பெரியோர்கள் இப்படி எங்கும் ஸாதிக்க அடியேனும் கேட்டதில்லை.

மேலும் பரந்தரஹஸ்ய க்ரந்தம் பெரியவாச்சான்பிள்ளையின் க்ருதியன்று என்பதை விசதமாய் விளக்கக்கூடிய அஷ்டாத்யாயியை அபிமானித்து தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டுக்கொண்ட பல மஹநீயர்களையும் பக்ஷபாதம் கொண்டவர்களென்றும் ப்ர. அ. ஸ்வாமி எழுதுவதையே வேதவாக்காகக் கொண்டவர்களென்றும் ஆஸ்திகர்களின் ஸ்ரீமுகங்கள் கொண்ட அஷ்டாத்யாயியணிகலனை தூஷணைச்சுவடி என்றும் எழுத தேவரீர் எப்படித் துணிந்தது? தேவரீர் வெளியிட்ட ஷோடசாத்யாயியே பூஷணைச்சுவடியாக தேவர்திருவுள்ளம்போலும். தேவரீரும் அஷ்டாத்யாயி வெளிவருவதற்கு முன்பு ப்ர. அ. ஸ்வாமியிடம் பக்ஷபாதமும் அவருடைய வாக்கையே வேதவாக்காகவும்கொண்டு அவருடைய அபிப்பிராயங்களை பூஷணமாகக்கொண்டு ஸுதர்சன பத்திரிகையில் மதிப்புரையாக வெளியிட்டதை மறந்துவிட்டதுபோலும். ஆச்சான்பிள்ளை அஷ்டாத்யாயீ விஷயமாயும், பரந்த ரஹஸ்ய க்ரந்தகர்த்தா பெரியவாச்சான்பிள்ளையல்லர் என்பதையும் பலமஹநீயர்களும் அநேகவித்வான்களும் விசேஷமாய் வானமாமலைமடம் ஆஸ்தானவித்வான்களாய் எள்ளியிருக்கும் ஸ்ரீ. உ. வே. A. கோபாலையங்கார் ஸ்வாமியும் ஸ்ரீ. உ. வே. தெ. திருமலாசார்ஸ்வாமியும் விண்ணப்பித்துக்கொண்டதைக் காட்டிலும் தேவரீரிடம் அடியேன் என்ன விண்ணப்பித்துகொள்ளப் போகிறேன். அடியேன் சிறியஞானத்தன் ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் விவாத சர்ச்சைகள் வந்தால் ஸ்ரீ வானமாமலைமடம் வித்வான்கள் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி வர்த்தமான பீடஸ்தராய் எழுந்தருளியிருக்கும் ஜீயர்ஸ்வாமியோடுகலந்து ஆலோசித்து க்ரந்தங்களை பரிசீலனைபண்ணி நிஷ்கர்ஷித்து ஸ்ரீஸ்வாமியின் திருவுள்ளத்திற்குப் பாங்கான அபிப்பிராயங்களை மடத்துவித்வான்கள் வெளியிடுவார்களேதவிர தாங்களாக அபிப்பிராயங்களைத் தெரிவிக்கமாட்டார்கள் என்ற பரம்பராவழக்கத்தின்படியே அபிப்பிராயங்களை நிஷ்கர்ஷித்து அணிகலனில் வெளியிட்டிருக்கிறபடியே அடியேனும் தேவரிடம் அடியேனின் சிற்றறிவுக்கு எட்டியதை விண்ணப்பித்துக்கொண்டேன். கடைசியாக தேவரீரிடத்தில் அடியேனுடைய வினயபூர்வமான ஒருவிண்ணப்பம்: தற்காலம் உலகம் இருக்கும் ரீதியில் ஆழ்வார்களின் செவிக்கினியசெஞ்சொற்

களையும் ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்தி க்ரந்தங்களையும் கரதலாமலகம்போல் தாமும் அனுபவித்து தம் அநுபவம் உள்ளடங்காமல் அதை பண்டிதர்களும் பாமரர்களும் பெண்களும் பேதைகளும் நன்றாய் அனுபவித்துக் காலயாபனம் பண்ணும்படி க்ரந்தரூபமாகவும் உபந்யாஸரூபமாகவும் ஆஸேதுஹிமாசலபர்யந்தம் பலபாஷைகளிலும் நம்ஸம்ப்ரதாய க்ரந்தார்த்தங்களை எளியநடையில் ப்ரசாரம்பண்ணி உலகுக்கு மஹோபகாரகராய் எள்ளியிருக்கிறவராயும் ஆசார்யர்களின் அபராவதாரமோ என்னலாம்படி எள்ளியிருக்கிறவராயும் இருக்கிற ஸ்ரீ உ. வே. ப்ர அ. ஸ்வாமியின் விஷயமாய் தூஷணச்சொற்களை அநாவச்யகமாக தேவர் எழுத்து மூலம் வெளியிட்டு பாகவதாபசாரப்படுவதால் அனேகஆஸ்திகர்களின் திருவுள்ளம் கன்றும்படியாவதை நிறுத்திக்கொள்வதற்காகவாவது ப்ரஸ்துதவிவாதக்ரந்தமான பரதத்வரஹஸ்ய க்ரந்தகர்த்தாவின் நிஷ்கர்ஷத்தைத்தெரிவிக்கக்கூடிய ப்ரமாணவாக்யங்களைமட்டும் ப்ரசுரித்தால் மிகவும் ஆனந்தமாயிருக்கும் என்று அடியேனுடைய ப்ரார்த்தனையை தேவர்திருவுள்ளம் பற்றவேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

சமீபகாலத்தில் ஸ்ரீ. உ. வே. ப்ர. அ. ஸ்வாமி பதரி யாத்ரையாகப் புறப்பட்டு 20—5—49ல் இவ்விடம் லக்ஷ்மீநாராயணன் ஸன்னதியில்எழுந்தருளி ஸ்ரீவைஷ்ணவ சிஷ்யகோஷ்டிகளுடன் 5நாள்வரை எள்ளியிருந்து சிகந்திராபாத் ஹைதராபாத்தில் எள்ளியிருக்கும் எல்லா ஆஸ்திகர்களின் உள்ளத்தையும் ஸ்வாமிக்கே அஸாதாரணமான அனேக உபன்யாஸங்களினால் கொள்ளைகொண்டு டை ஆஸ்திகர்களால் ப்ரேமரூபமாயும் ஸ்வரூபாநுரூபமாயும் ஸமர்ப்பிக்கப்பட்ட பஹுமானங்களையும் ஸ்வீகரித்துகொண்டு இவ்விடம் விட்டு பதரிகாச்ரிராமத்துள்ளானை மங்களாசாஸனம் பண்ணவேண்டுமென்று அதித்வரையாகவே எள்ளிவிட்டார். இன்னும் கொஞ்சநாள் ஸ்வாமியுடன் கூடி செவிக்கினிய செஞ்சொற்களை அனுபவிக்கப் பெற்றிலோமே என்று எல்லாரும் சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும் பொழுது தேவரீர் அனுப்பின ஷோடசத்தைப்பெற்று அதில் ஸ்வாமிவிஷயமான தூஷணைச்சொற்களைக் கண்டு எல்லா ஆஸ்திகர்களும் மிகவும் வருத்தமடைந்து தேவரீருக்கு ஸ்வாமிவிஷயத்தில் இவ்வளவுவைஷம்யமுண்டாக ஹேது வில்லையே என்று தேவர்விஷயத்தில் மிகவும் நிர்வேதப்படும்படியாய்விட்டார்கள்.

ஆகையால் தேவரீருக்கு இனிமேலாவது ஸம்பந்தமில்லாமல் தூஷிக்கும்படியான புத்தி விசேஷத்தை அருளாதிருக்கும்படி லக்ஷ்மீநாராயணன் ஸன்னிதியில் எல்லோரும் ப்ரார்த்தித்து அவரவர் ஸ்வஸ்தானத்துக்கு எள்ளினார்கள்.

தேவரீர் இனிமேல் வெளியிடும் பத்திரிகைகளில் பரிஹாஸாஸ்பதமான வைஷம்யச்சொற்களை வெளியிடாதிருக்கும்படி அடியேன் பலகாலும் ப்ரார்த்திக்கிறேன்.

**தாஸன் தெ. ஸ்ரீனிவாஸன்.**

[இப்படிப்பட்ட லெட்டர்கள் பலபெரியார்களிடமிருந்து நூற்றுக்கணக்காக ஸுதர்சன பத்திராதிபரிடம் சென்று சேர்ந்திருக்கின்றன. அவற்றின் காபிகளெல்லாம் நம்மிடம் அவர்களாலேயே அனுப்பப்பட்டு வந்திருக்கின்றன. இவற்றை ஸுதர்சனத்தில் பிரசுரிக்க வேண்டியது கடமையாயிருந்தும் பிரசுரம்செய்யாததோடு இப்படிபலபேர்கள் அண்ணங்கராசாரியஸ்வாமியின் அன்பர்கள் எழுதிக்கொண்டிருக்கிறார்கள்; இதனால் என்னாகும்! என்று எழுதிவெளியிடப்பட்டிருக்கிறது. யாளிவாஹன ஜீயருடையவும் நேமிநாத்மஹாராஜ்போன்ற கற்பனைநபர்களுடையவும் கடிதங்களினாலேயே எல்லாமாகுமென்பது பிறருடைய நினைவுபோலும். எல்லாம் க்ரமேணவெளியாகும்.—ப்ர. அ.]

ஸ்ரீ:

## திருமலை அனந்தாண்பிள்ளை ஸ்ரீசைல க்ருஷ்ணமாசாரியருடைய கடிதம்.

ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ராதிபர்க்கு விண்ணப்பம். 7—5—49ல் எழுதிவெளியிட்ட என் விண்ணப்பத்திற்கு உபாலம்பத்துடன் நீங்கள் எழுதியிருக்கிற பதிலை ஸுதர்சனம் 19ல் பார்த்தேன். என்னுடைய கேள்விகளுக்கு நீங்கள் ருஜுவாக பதில் சொல்லமுடியாதென்பது உலகமறிந்ததே. ஆனாலும் உங்களுடைய பேச்சுக்களுக்கு ஒன்றுவிடாமல் விவேகிகள் உகக்க நான் பதில் சொல்லியே தீருவேன்.

என்னுடைய ஒரு சிறுகையெழுத்துக் கடிதத்தில் 'தேவனை' என்று எழுதியிருப்பதாகவும் 'அது எந்த பாஷையோ தெரியவில்லை' யென்றும் எழுதியிருக்கிறீர்கள். விநயமுடன் தெரிவிக்கிறேன். அது மணிப்ரவாளபாஷை. 'தேவரீர்களை' என்பதை 'தேவனை' என மரூஉமொழியாக வழங்குவர் பெரியோர். இதை மரபு என்றும் தமிழர் சொல்லுவர். நன்னூலில் "எப்பொருளெச்சொலி னெவ்வா

றுயர்ந்தோர், செப்பின ரப்படிச் செப்புதல் மரபே " என்றுள்ள சூத்திரத்தைப்பெரியாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வீராக. பெரியாழ்வாருடைய அம்மம், கும்மாயம் இத்யாதிப்ரயோகங்களைப்பற்றியும், ஆண்டாளுடைய இட்டீறிட்டு இத்யாதிப்ரயோகங்களைப்பற்றியும் விசாரம் செய்தாலாவது உலகம் உய்யும். நான் சப்தப்ரயோகம் எப்படிப் பண்ணினுலென்ன? மிகப்பெரிதாக இரண்டு பக்கம்வியாஸமெழுதி யச்சிட்டுவெளியிட்டிருக்கிறேன். அதில் தேடிப்பார்த்தும் ஒருபிழை உங்களுக்குக்கிடைக்கவில்லை. சிறுகையெழுத்துக் கடிதத்தில் தேவளை யென்றிருப்பதாகக் கண்டு இதையொருவிஷயமாக எழுதிப் பத்ரபூரணம் செய்கிறீர்கள். நீங்களும் ஜீயர் ஜீயர் என்று அடிக்கடியெழுதிவருகிறீர்கள். இதே 19-வது பத்ரிகையில் யாளிவாஹனுத்ஸவஸ்வாமியை ஜீயனென்று கொட்டையெழுத்தால் காட்டியிருக்கிறீர்கள். ஜீயரென்கிற சொல் எந்தபாஷையைச் சேர்ந்ததென்று அறிவீர்களோ? இது ஸம்ஸ்க்ருதபாஷைச் சொல்லென்று நீங்கள் க்ரஹித்திருக்கலாம். ஸம்ஸ்க்ருதத்தில் கிஞ்சித்ப்ரவேசமுடையவர்களும் இப்படி க்ரஹிக்கமாட்டார்கள். தமிழில் ஜகாரமில்லாமையாலே இதைத் தமிழ்ச்சொல்லாகத் தமிழர் கொள்ளார்கள். இனி எந்தபாஷையென்பதை வித்வான்களையடிபணிந்து அறிவீராக. அந்த வித்வான்களே 'தேவளை' என்ற சொல்லின் தத்துவத்தையும் உமக்கு உணர்த்துவார்கள்.

நான்கேட்டிருந்த கேள்விக்கு நீங்கள் என்னவிடை கூறியிருக்கிறீர்களென்பதை முன்னம் ஆராய்ந்து முடித்துவிட்டுப் பிறகு இந்த ப்ரஸங்கங்களை வைத்துக்கொள்வோம். நாம்கேட்ட கேள்வியென்ன? என்பதை உலகுக்குச் சிறிது நினைப்பூட்டுவோம். சதுச்ச்லோகீ வியாக்கியானத்தைப் பெரியவாச்சான்பிள்ளையின் க்ரந்தமாக முன்னம் மார்கழிமாதத்தில் பிரசுரம் செய்துவிட்டு, பிறகுமாசிமாதத்தில் "சதுச்ச்லோகீ வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததாகத் தவறுதலாய் அச்சிட்டுவிட்டேன்; அது நாயனாராச்சான்பிள்ளையருளிச்செய்ததேயொழியப் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்ததன்று" என்று பிரசுரம் செய்தீர்களே, இது எதனுல்? என்பதே நம்முடைய கேள்வி.

இதற்கு இப்போது என்னபதில் வெளியிட்டிருக்கிறீரென்றால்; இது நானெழுதவில்லை, மானேஜர் எழுதினுரென்று ஒரு ஸத்யமுரைக்க ஆரம்பித்தீர். அட்வொகேட்டுகளுக்கு டெக்னிகல் பாயிண்ட்ஸ் தெரியுமன்றே. "வக்கீல் ஏதோ எழுதிவிட்டார்; எனக்கொன்றும் தெரியாது" என்று (வக்கீலே சொல்லிக்கொடுத்து) வாதியோ பிரதிவாதியோ சொல்வது போல இப்படியெழுதிவிட்டீர்கள். இவ்வளவோடு நின்றிருந்தால் அதுவும் ஒரு கௌரவமாகவேயிருக்கும். உடனேயெழுதுகிறீர்கள்— "பெரியவாச்சான்பிள்ளையருளிய சதுச்ச்லோகீவியாக்கியானம் ஒன்று இருப்பதாக சிலபுத்தகங்களில் காணப்பட்டிருக்கிறது. அப்புத்தகம் அகப்படாததினுலும் அவருடைய திருக்குமாரர் அருளிய சதுச்ச்லோகிவியாக்யானம் கிடைத்தபடியினுலும் அதைத் தெரிவித்தோமித்தனை" என்று.

ஒரு கோபியினுல் "நவநீதபாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதாः?" என்று கேட்கப்பட்ட கண்ணன் "மாதः கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும்" என்று விடைகூறினுனும். காட்டில் கெட்டுப்போன கன்றுக்குட்டியை வெண்ணெய்த்தாழியில் கையிட்டுத்தேடினுனும் கண்ணன். அந்த சதுர வார்த்தைக்கு உலகமெல்லாம் ஈடுபடும். இந்த அசட்டு வார்த்தைக்கு உலகமெல்லாம் ஐயோவென்றிரங்கும். கேண்மின். ஒரு க்ரந்தத்திற்குப் பலர் வியாக்கியானம் செய்திருக்கலாம். இது அஸம்பாவிதமன்று. சதுச்ச்லோகிக்குப் பெரியவாச்சான்பிள்ளையும் ஒரு வியாக்கியானம் பணித்திருக்கலாம். "அதை அச்சிடுவதாக இருந்தேன், அது கிடைக்காமையினுலே ஆச்சான்பிள்ளையின் வியாக்கியானம் அச்சிடப்படுகிறது" என்றிப்படியன்றே நீங்கள் தெரிவித்திருக்கவேண்டும். இப்படியில்லையே. "சதுச்ச்லோகீ வியாக்கியானம் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்ததாகத் தவறுதலாய் அச்சிட்டுவிட்டேன்......... திருத்திக்கொள்ளவும்" என்றன்றே எழுதியிருக்கிறீர்கள். இந்த விஷயத்தில் விசேஷ விசாரணை நடந்தே தீரும்.

"பெரியவாச்சான்பிள்ளையருளிய சதுச்ச்லோகீ வியாக்கியானமொன்றிருப்பதாகச் சில புத்தகங்களில் காணப்பட்டிருக்கிறது" என்றெழுதியிருக்கிறீர்கள். மிகவும் ஸந்தோஷம். அப்புத்தகங்கள் எவை? சிலபுத்தகங்களில் என்றெழுதியிருக்கிறீர்களாதலால் இரண்டு மூன்று புத்தகங்களாவது இருக்க வேண்டும். இரண்டு வேண்டா மூன்று வேண்டா; ஒருபுத்தகம் காட்டிவிடுங்கள் போதும். அந்தப் புத்தகத்தைக்கொண்டே 'பெரியவாச்சான்பிள்ளை வேறு வ்யக்தி, ஆச்சான்பிள்ளை வேறு வ்யக்தி' என்பதை நான் ஸ்தாபிக்காமல் போனேனேயானுல் உமக்கு அடிமைப்பட்டே தீருவேன். நீங்களே குறித்திருக்கிற ஸ்ரீ. உ. வே ஸ்ரீரங்கம் கோவிந்தாசார்யஸ்வாமி திருமாளிகைக்கு வந்து சேருகிறேன். அங்கு இந்த விசாரம் முடிவுபெறட்டும். ஸத்யமே ஜயமென்கிற வுங்களுடைய ஸத்யத்தின் பெருமை உலகுக்கு வெட்டவெளிச்சமாகட்டும்.

நீங்கள் விஷய விசாரத்தோடு நிற்காமல் மிகவும் அநாவச்யகமான. நிந்தைகளை நிரப்புகிறீர்கள். ஆச்சான்பிள்ளையாருரஹஸ்யம் உங்களுடைய பெருமைகளையெல்லாம் பரவச்செய்துள்ளது. தயார் முதலிய துருஷ்கமொழிகளைப் பத்ரிகைதோறும் எழுதிவைத்திருக்கும் நீங்கள் **தேவளை** என்கிற பரிபாஷைப்பேச்சைப் பழிக்கின்றீர்கள்.

அன்றியும் "இவர் கையெழுத்தாலேயே விண்ணப்பம் முழுவதும் எழுதியிருந்தால் எண்ண முடியாத பிழைகள் ஏற்பட்டுவிடுமென்றே அச்சிட்டிருக்கிறுர போலும்" என்றெழுதியிருக்கிறீர்கள். உலகில் யார்யார் அச்சிடுகிறுர்களோ அவர்களுக்கெல்லாம் இதுதானே காரணம்? 'ஸ்ரீமதே ராமாநுஜாய நமஹா' என்கிற உங்களுடைய கையெழுத்துப் பிரதியைப் பலகால் பார்த்திருப்பதாக ஸ்ரீரங்கம் பட்டர்ஸ்வாமி தெரிவித்திருக்கிறுர். ஆனல் எங்கள்போல்வார்க்கு இதையெல்லாமெடுத்துப் பேசப் பழக்கமில்லை., அவச்யமுமில்லை. விஷயங்களில் வாய்திறக்க முடியாதவர்களே இப்படிப்பட்ட வம்புகளில் வியாபரிப்பவர்கள்.

"சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு அர்ஜுனன் பாணம்போட்டதுபோல் இவரை முன்னிட்டுக்கொண்டு P. B. A. ஸ்வாமி......" என்றெழுதியிருக்கிறீர்கள். பண்டிதர்கட்கு இதுவா விஷயம்? அப்படித்தானிருக்கட்டுமே. அர்ஜுனன் அப்படிச்செய்யலாமென்று எந்த சாஸ்த்ரத்தில் நியமனமிருக்கிறது. விஷயத்தை விட்டு வேறுவழிகளில் இழுத்துக்கொண்டுபோய் விடுவோமென்பது உங்களுடைய எண்ணம். நாம் முக்கிய விஷயங்களையும் விடமாட்டோம்; குறுக்குவழிகளில் வருகிற விஷயங்களையும் விடமாட்டோம், ஒவ்வொன்றிலும் நீங்கள் பங்கமடைந்தே தீருகிறீர்கள். "அதற்கு பதில்கிடையாது, இதற்குபதில்கிடையாது" என்று அர்த்தமில்லாத வார்த்தைகளையெழுதிப்பாமரர்களை மயக்கப்பார்க்கிறீர்கள். ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதியிலும் ஆச்சான்பிள்ளையாருரஹஸ்யத்திலும் எல்லாவற்றுக்கும் பதில் கண்டு உலகம்களிக்கிறது. எதற்கு பதிலில்லையென்பதைவ்யக்தமாக வெழுதுங்கள். பதில் தெரிவித்துவிட்டே உண்போம். என்னுடையவசவுகளுக்கு பதிலில்லையேயென்பீர்! உண்மையே!

மத்யஸ்தபண்டிதர்கள் மஹான்கள் தெரிவிக்கிற அபிப்ராயங்களையெல்லாம் அடியோடு வெளியிடாமலே வந்ததாகமாத்திரம் காட்டிவிட்டு "அவர்கள் P, B. A. ஸ்வாமியின் கிங்கரர்கள்" என்று கூசாமல் எழுதுகிறீர்கள். பெரும்பாலும் உலகர்கள்யாவருமே ஸ்வாமியின் கிங்கரர்களே. அதற்குப் பொறுமைப்பட்டுப் பயனில்லையே.

பெரியார்களின் ஸ்ரீமுகங்களில் **போச்சுது**, **ஸாதிச்சாச்சுது** என்றிருக்கிற வார்த்தைகளையெடுத்துக்காட்டிப் பழிப்பாக எழுதியிருக்கிறீர்கள். ஏதோவொருபாஷையிலாவது அவகாஹனமிருந்தால் இப்படி யெழுதியிருக்கமாட்டீர்கள். "துளவதுளவ வெனச்சொல்லும் சொல் போச்சே, அளவில்நெடு மூச்சுமாச்சே" என்கிற திவ்யகவி வெண்பாவைக் கேட்டுணர்வீராக. இப்படிப்பட்ட வார்த்தைகளெல்லாம் பெரியவாச்சான்பிள்ளைவியாக்கியானங்களில் மலிந்துள்ளன வென்பதை அடுத்தபடியாக எடுத்துக் காட்டுவோ முலகுக்கு. சீமாஸாசார் என்றதில் என்ன பிசகு? திருநாமங்களை உலகர் வழங்கி வருகிற ரீதியில் எழுதுவதன்றோமுறை: 'அப்பளார்யமஹம் பஜே' 'அண்ணயார்யமஹம் பஜே' 'திம்மப்பாசார்யமாச்ரயே' 'வந்தே! திருமளாசார்யம்' இவை யெல்லாமறியீன். 'நாயிந்தே நாமுந்தே' இது என்ன பாஷை தெரியுமோ?

எம்மைப்பற்றின தூஷணையின் முடிவில் "இவ்விடத்திற்கு அரும்பதம் எழுதிய ஒரு மஹான்" என்றெழுதியிருக்கிறீர்கள். அரும்பதமென்பதற்கு இன்னது பொருளென்றே அறிந்திலீரே அந்தோ! அர்த்தம் தெரியாமலிருக்கிற அருமையான பதத்திற்கு அரும்பதமென்று பெயர். அதன்பொருளை விவரித்துப் பின்னுனர் எழுதும் வியாக்கியானத்திற்கு அரும்பதவிளக்க மென்று பெயர். இச்சிறு விஷயங்கூட அறியாமல் தப்புந் தவறுமாக எழுதிக்கொண்டும், அவர் பண்டிதரோ? இவர் நியாய வேதாந்த வித்வானே? என்று பெரியார்களை தூஷித்துக்கொண்டும் போதுபோக்குகிற உங்களைப்பற்றி அடுத்த வெளியீடு எதிர்பார்க்கத்தக்கது. நான் சிகண்டியாகவும் ஸ்வாமி அர்ஜுனனுகவுமிருந்தே "யத்ர பார்த்தோ தநுர்த்தரஃ, தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம" என்கிற ச்லோகார்த்தம் மெய்ப்பிக்கப்படும்—காருள்ளளவும் கடல்நீருள்ளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும்.

ஸ்ரீகாஞ்சி ஸ்ரீசைலக்ருஷ்ணமஹாசார்யர், 5-7-'49.

---

ரத்னம் அச்சகம், 11, பத்திரையன் வீதி, மதருஸ்—1.

# 'THIRUPPAVAI'

## OR

## HYMNS TO THE BEAUTEOUS GRACE

### INTRODUCTION

#### 1. The Poetess

The thirty hymns here presented are known as "Thiruppavai" or "Hymns to the Beauteous Grace." They were composed by a great Tamil Poetess, Sri Andal of Sri VilliPuttur, a small town in Tinnevelly district. She was one of the twelve Tamil Vaishnava Singers popularly known as the Alwars, and was herself the pet and adopted daughter of Peri-Alwar or the Great Saint. Born of a poetic race whose inheritance was divine wisdom,—pure and undefiled,—and trained from her girlhood towards saintly discipleship by her erudite father, Sri Andal vowed that she would wed none other than Lord Vishnu. In a poem addressed to the Lord of Love or Kamadeva, she says "If to any human being thou wouldst speak of wedding me, cease would I to live." Sri Andal has contributed one hundred and seventy three verses to the Sacred collection of all the Alwars known as "Nalayira-Divya-Prabandam" or "the Golden Treasury of Four-thousand." Her other work, besides "Thiruppavai" is styled as "Nachiyar Thirumoli or the Bridal Queen's Beautiful Utterances."

#### 2. God. the Eternal Bride-groom

The Lord can be approached in a spirit of passionate love and utter self-dedication. He is viewed as the Eternal Bride-groom or "Nithya-Manavalan" and the human soul, as the "Bride-elect" or the 'Bride-in-waiting." The Alwars have sung of the Lord, assuming in their poetic fashion a maidenly guise. The poetic justification for this assumption of femininity is that the Lord is so powerful in His masculine might that human strength is nothing but womanliness before His Splendour. While all the other Alwars are masculine by birth, Sri Andal, alone among them was a woman, and could naturally and fittingly adopt the tone and the garb of the bridal queen. While all the other Alwars waited for the Lord to come and wake them up, Sri Andal chose to go out in the company of other damsels of her own frame of mind in quest of the Lord, so that all might bathe in His Divine grace. Hers is not a selfish and narrow Heaven whose doors are open only to austere pilgrims of penance,— but a boundless,

expansive Paradise where service to the Lord and His devotees betokens endless pleasure, and where companionship in such service increases the rapture a thousandfold. And what a jest does Sri Andal practise! She, who was brought up in a high brahmin family of noble learning and pedigree assumed the role and guise of a low, simple, unlettered Cowherd lass so that she might wed Sri Krishna, who had been brought up by cowherds, and whose rise to royalty and power did not diminish his love for them. The "Ras-Lila" or the "Play of Love", where God is the centre and circumference of this Love-episode with human souls for His eternal partners in the dance is the theme of Thiruppavai. God's companionship with the low and the forlorn is such that it is impossible to reach Him unless one becomes low and contrite in spirit,

### 3. An Allegorical Pastoral Lyric

"Thiruppavai" may be fittingly styled as an Allegorical Pastoral Lyric. Its theme is the well-known one of the attainment of the Lord through service to humanity, (Bhagavatha-kainkarayam), and in this respect, may be likened to Leigh Hunt's famous poem, "Abou Ben Adam." In this pastroal lyric, Sri Andal weaves ideas into a magic garment of peerless artistry in such a way that it is difficult to distinguish the woof from the warp. The simple faith of the village peasantry and their unique festival for invoking the rains with rites, rituals, and symbols turn out in reality to be a search for the beautiful beloved Sri Krishna, without whose grace life has no meaning.

Like a kindly light, Sri Andal leads the wondering reader who has awakened from his slumber, at early dawn, step by step towards God's very throne of bliss—"Ratna-Simhasana"—from which a mere glance from His beauteous eyes twain would dispel the curse of life.

It looks as though we are suddenly transported to the golden age of Sri Krishna, and are made quite familar with the sweet sights and melting notes of Gokulam so that we might more truly exclaim,

> **"Bliss was it in that great dawn to be alive,**
> **When, to be young was very heaven".**

To be young and fair, and a maiden of bashful beauty and charm to captivate the heart of Sri Krishna—that were a thing most lovingly to be wished! Who would not throw away all wealth, noble birth, and renown, and cast learning and pride to the winds—if one could barter for these—an admission into the society of the charming unlettered village belles of Brindavan. How lucky are we!

We enter at once into Gokulam, the loveliest and richest village that eyes have ever seen, where copious showers fall thrice a month, where lilies blue blossom sweet, where the mottled bee slumbers soft on lotus-beds, where the rich red paddy yields a golden harvest, where the noble milch-kine fill pots after pots with milk in such abundance that the wayside is all miry with milk, where the larks sing in unison as the peacocks dance and where, in short, there is nothing but sweetness and calm, and eternal beatitude. In such a village Sri Krishna was the centre of all love-episcdes, and the cynosure of all gopis' eyes. It was His magic flute that cast its slumberous spell over the whole atmosphere, creating a rapture and harmony far beyond words to describe.

### 4. The Ritual

Whenever the rains failed, it was the custom among the villagers to undertake a festive vow, and invoke the blessings of the Rain-God for granting them a boon of heavy down-pour so that the land might be rid of all poverty and gloom. Kathyayani, the Goddess whose image was worshipped on such occasions, was supposed to shower Her grace upon Her devotees. Symbols were used during the time of worship, such as "the Big Drum, conches, flags, beauteous lamp, and canopy"—and these are all described in hymn 26 of Thiruppavai. Probably the drum or "the Parai" was the most significant of them all, since it proclaimed the advent of the festival, and brought the distant near, sending its reverberations far and wide. This word "Parai" is used in different senses in different hymns, and indicates not only the festive vow, and service to humanity and their happiness which it implied, but also figuratively, the divine bliss, which is the final object of attainment. "Parai"—thus represents both the means and the end. (Refer to Hymns 1, 8, 10, 16, 24, 25, 26, 27, 28, 29, 30.)

Similarly, the word "Pavai"—or the Beautiful image"—after whom the poem itself is named signifies the Magnetic Mother of Divine Grace, whose blessings alone could make the festive vow a success, and whose charm pervades the musical refrain of every stanza—"El Or Empavai!"—which may be translated as—"May our Gcddess bless the vow!". Her devotees,—and what a sweet throng they are!—each, with a distinct individuality,—are but counterparts of the Divine Mother, and are gracefully addressed as "Impish Girl! Queen of maids! Resplendent one! Jubilant image of beauty! Precious jewel! Darling queen!"—enriching epithets of endearing tenderness which sit sweetly on the tongue, fall softly on the ears and enter charmingly the heart. The rituals do not matter at all;—they are only a means to an end. Nor does Katyayani obtrude herself;—She is kept in the back-ground, like the musical refrain itself.

The sweetness of Sri Bhagavatham is presented to us as in a dream-picture. The sleeping human souls are likened to the Gopis of old and they are awakened from their sleep to enjoy divine bliss. There is no spirit of rivalry or selfishness in seeking to obtain the Lord's Grace. The spirit which animates the Poem is one of selfless bliss whose value is enhanced by the commingling and participation by all aspirants to God's love. The greater the number of the beloved souls who wake up from their sleep for a journey to the ennobling River of Bliss for a bath, the greater is the happiness derived from it.

> **"Immersion in the sea of the Lord of Glory**
> **Immersion from which there is no extrication,**
> **As it were identification with the very ocean".**

## 5. The Poem

### MAIN TRENDS

As the thought of the festive vow enters their minds, the Gopis find that it is a full moon day, and the bright moon seems to smile upon them as a good augury for the success of their undertaking. An aspiration for divine bliss - a keen desire to dive in the River of Bliss—is the only trait needed to join the company of the wealthy damsels of the rich herdsmen's village. They alone are wealthy whose minds are turned towards God and are ever bent on pleasing service to humanity. The Lord's Grace is a foregone conclusion—the inevitable fruit on the top of the tree of life.

### HYMN 2

The ritual to be observed is indeed rigorous,—enjoining discipline, but the path of bliss is delightful, and the devotees therefore resolve to follow the straight traditional method, avoiding all slander and evil from their thoughts.

### HYMN 3

The devotees, in the observance of their festive vow, resolve to chant the various names of Lord Purushothama while taking their holy bath so that the rains may fall thrice a month and increase the fertility and natural wealth of the world.

### HYMN 4

The rain-bearing cloud is indeed an image of the dark-coloured Vishnu,—the Primal First! Does not the lighting resemble His resplendent disc?—and the thunder, His resounding conch?—, and the vernal showers, the thick arrows rained out of his bow, Sarnga? Unless the whole world is happy, the festivity of a few souls would indeed be meaningless.